# திருக்குறள் மூலமும் பரி ப்பெருமாள் உரையும்

பதிப்பாசிரியர்

வித்துவான். கா.

# ம.
# வேங்கடராமையா

## எம். ஏ.,




அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

1 அறன் வலியுறுத்தல்

2 கடவுள் வாழ்த்து

3 நீத்தார் பெருமை

4 வான் சிறப்பு

இல்லறவியல்

5 அடக்கமுடைமை

6 அழுக்காறாமை

7 அன்புடைமை

8 இல்வாழ்க்கை

9 இனியவை கூறல்

10 ஈகை

11 ஒப்புரவறிதல்

துறவறவியல்

25 அருளுடைமை

76 26 அவாவறுத்தல்

111 27 இன்னா

செய்யாமை

96

28 கள்ளாமை

29 கூடாவொழுக்கம்

30 கொல்லாமை

31 தவம்

32 துறவு

33 நிலையாமை

43 இறைமாட்சி

44 ஊக்கமுடைமை

45 ஒற்றாடல்

46 கண்ணோட்டம்

47 கல்லாமை

48 கல்வி

49 கேள்வி

50 காலமறிதல்

51 குற்றங்கடிதல்

52 கொடுங்கோன்மை

53 சிற்றினஞ் சேராமை

பக்கம்

பக்கம்

84 இகல்

260

85 உட்பகை

269

86 கள்ளுண்ணாமை

281

87 சூது

284

88 பகைத்திறந்தெ

314
99 கயமை
326 100 குடிசெயல்
வகை
311 101 குடிமை
290 102 சான்றாண்மை
ம
299 103 நல்குரவு
317 104 நன்றியில்
செல்வம்
305 105 நாணுடைமை
308 106 பண்புடைமை

302 107 பெருமை
296 108 மானம்
293 காமத்துப்பால்
களவியல்

109 அலரறிவுறுத்தல்
352 110 காதற்
சிறப்பு ை ரத்த ல்
346 111 குறிப்பறிதல்
334 112
தகைய ணங்கு றுத்த ல்
331 113
நலம்புனைந்துரைத்த ல்

நாடார் ஆய்தலின்
என்மதி யளவின்
யானறிந் துரைத்த
மழலைக் கிளவியை
மதியோர் ஆராய்ந்து
இகழ்த லன்றியே
யாவையு மிமைத்துத்
திருத்தி
யுரைத்தல் வேண்டும்
அருத்தும் பயில்வோர் அருங்கடன்

RangaRakes

எனவே.



புதியது தீது பழையது
நன்றென்றல்
பூமியுள்ளோர் விதியது
வேபொரு ளென்னன்மின்
நல்லோர்
விழுப்பமுண்டே புதியது

நன்று பழையது
தன்னினும் பூமடந்தை
பதியதின் மேவில்
பருமுத்தொ
டாடையைப்
பார்மின்களே.

கண்ணும் முகமும்
கருங்குழலும் செவ்வாயும்
வண்ண முலையும்
வனப்புடைத்
தென்-றெண்ணிக்
கருத்தறியார் சாரலுறுங்

காளையர்நேர் முப்பால்
கருத்தறியா
துட்குறள்காண் பார்.

நல்வினை செய்வார்
நாடோறும் வந்திக்க
நான்முகனார் தொல்லுரை
யைத்தென் தமிழா
லறியத் துககடபுசீர்
இல்லற முந்துற
வும்பொருட் பக்கமும்
இன்பமு மாம் பல்வகை

யாவரு ளுந்திரு
வள்ளுவன் பாதங்களே.

—:—

உலகத்து
மக்கட்கு உறுதிபயத்தல்
காரண மாகப் பல்வகைப்
பட்ட சமைய நூல்கள்
எல்லாவற்றுள்ளும்
துணிந்துரை அறம்.
பொருள். இன்பம், வீடு

எனப்பட்ட பொருள்
நான்கினும் சுருங்கிய
முகத்துணர்த்து வான்
எடுத்துக்கொண்டார்
அவற்றுள் வீடென்பது
அறஞ் செய்தாரது
பயன் ஆதலின்
அவ்வீடுபேற்றை அறத்
தினு ளடக்கி
அறத்துப்பால்,
பொருட்பால்,
காமத்துப்பால்' என்று

மூன்று பகுதியாகக் கூறினார் என்று கொள்ளப்படும். அவற்றுள் அறமானது அறம் முதலான பொருள் நான்கினையும் பயத்தலின் முற்படக் கூறினார். பொருளானது வீடொழிந்த பொருள் மூன்றினையும் பயத்தலின் அதன் பி

ன் கூறினர்.
இன்பமாவது
பெரும்பான்மையும்
இன்பம் ஒன்றினையும்
பயத்தலின் அதன்பின் கூ
றினர் என்று
கொள்ளப்படும்.

இனி அறமாவது
தானம், தவம், விரதம்,
பூசை யென நால்
வகைப்படும். தானமும்

பூசையும் இல்வாழ்வ
ாரறஞ் செய்யப்படு
தலானும், தவமும்
விரதமும் துறந்தாரறஞ்
செய்யப்படுதலானும்.
அவை இல்லறம்
துறவறம் என இரண்டு
பகுதியாக்கி அறத்துப்
பால் கூறப்பட்டது.
அதனுட் கடவுள்
வாழ்த்தும் வான் சிறப்
பும்

துறவறம் பதின்

மூன்றதிகாரமும், ஊழ்

ஓரதிகாரமும் ஆக

முற்பட முப்பத்தெட்டதி

காரங்கள்

கூறப்பட்டன.

புருஷார்த்தமாகிய

தன்மார்த்த காம

மோக்கங்களுள் முதன்

மூன்றனையும்

வழுவாதொழுகவே

மோக்கமெய்துதலான்
அதற்கு வேறு
வகுத்துக்கூற வேண்
டுவதின்மையின் அஃது
ஒழித்து ஒழிந்த நூர்
மார்ந்த காமப்
பகுதிகளை
அறத்துப்பால்
பொருட்பால் காமத்துப்
பால் என்றும் பேர்
கூறுவார் மங்கல
வகையான்

எப்பொருட்கு முதலாகிய
கடவுள் வாழ்த்தும்
அக்கடவுளினது
செய்கைத்தாகி இவ்
வுலகின் றியலை
மயாதாகிய
வான்சிறப்பும்,
பிறப்பினிற் சிறப்
பெய்துதற்குரியராகிய
முனிவரது
பெருமையும்

அவரால்
கொண்டுய்க்கப்படுகிற
அறத்தினது வலியும்
நான்கதிகாரத்தாற் ...
ரித்தும் பிரமசரியம்
காருகத்தும் வானப்
பிரத்தம் சந்நியாசம்
என்னும் நால் வகைப்
பட்ட அறத்தினும்
பிரமசரியன் சீடராய்
நின்றொழுகுவதன்றிச்

செய்வது
பிறிதின்மையின்
அதனைப் புதல்
வரைப்பெறுத
லென்புழியடக்கிக்
காருகத்தம்
இருபததிகாரத்தானும்
வானப்பிரத்தம்
பத்ததிகாரத் தானும்
சந்நியாசம்
மூன்றதிகாரத் தானும்,
எல்லார்க்கும்

பொதுவாகிய ணம்
ஓரதிகாரத்தானுமாக
முப்பத்து நான்கதிக
ாரத்தின் அறத்துப்பால்
கூறிப் பொருட்பால்
அரசன் முதலாக
நாட்டி அவற்றுக்குப்
புறத்துறுப்பான படை
குடி
கூழ் அமைச்சு நட்பு அ
ரண் என ஆறுகப்

பகுத்து அரசற்குரிய
திறம்
இருபத்தைந்த
திகாரத்தானும்,
அமைச்சரதியல்பு
பத்ததிகாரத்
தானும், நாடும்
அரணும் பொருளும்
ஓரோரதிகாரத்தானும்,
படை
யிரண்டதிகாரத்தானும்

நட்பு
ஐந்ததிகாரத்தானும்,
பகை ஆறதி
காரத்தானும்,
அரசர்க் கங்கமான
பெரியோரைப்
பிழையாமை
முதல் மருந்தீருக
ஆறும்
ஆறதிகாரத்தானும்.
அதற்குறுப்பாகிய

குடிமை முதல்
நாணுடைமை
எனப்படுவன வேழும்
ஏழதிகாரத்
தானும் அரசர்க்கும்
ஏனை வருணங்கட்கும்
ஒப்ப உரித்தாகிய குடி
செயல் வகையும்,
அவருட் பார்ப்ப
ரொழித்துப்
பெரும்பான்மை
வேளாளர்க்

குரித்தாகி ஏனை
யோர்க்குச் சிறுபான்மை
யுரித்தாகிய

உழவும்
ஓரோரதிகாரத்தானும்,
அவ்வாறு பொருள்
செய்யாத வழி

உளதாகு நல்குரவும்
அது பற்றித் தோன்றும்
இரவும் இரவின்கணுளவ

தாகிய அச்சமும்

அதிகாரமாக்கி ஒரோரதிகாரம் பத்துக் குறள் வெண்பாட்டாகக்கொண்டு இங்ஙனம் ஆயிரத்து முந்நூற்று முப்பது பாட்டால் வட நூலும் தமிழ் நூலும் கூறும் பொருளெல்லாம் தொகுத்துக் கூறினார் என உணர்க.

(—இவ்வாறு

இராமநாதபுரத்தைச்

சேர்ந்த துன்படக்கி

கோட்டை

முத்துவயிரவநாதப்

புலவர் திருக்குறட்

பரிமேலழகருரை

யேட்டிலும்

திருநெல்வேலி

வண்ணாரப்பேட்டை

கவிராயரவர்கள்....

# 1. கடவுள் வாழ்த்து

அவற்றுள் கடவுள் வாழ்த்தாவது தெய்வ வணக்கம் கூறுதல். (வழி) பாடு தெய்வ வணக்கம் செய்ய வெடுத்துக் கொண்ட தினிது முடியும் என்பதனாலும் கடவுள் வழிபாடு நால்வகைப்பட்ட வறத்

திறும் பூசையாதலானும்
இவரை வழிபடாதார்
செய்வதோர் றமில்லை
ஒ யன்பதனுனும்
இவ்வதிகாரம் முற்படக்
கூறப்பட்டது. இதனுள்,

1. அகர முதல
வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

(இதன் பொருள்)
என்பது எழுத்துக்க

ளுள்ளும் சொல்லிற்குக்
காரணமாகிய எழுத்தும்
சொல்லும் பொருளும்
அகரத்தைத் தமக்கு
முதலாக உடையவாறு
போலத் தோன்றுகின்ற
எல்லாப் பொருட்கும்
காரண மாகிய உலக மும்
நீர் தீ வளி ஆகாயமுமாகி
ஒன்றோடொன் றொவ்வாத
பெற்றிய தாயிருப்பினும்

ஆதி பரமேசுவரனைத்
தமக்கு முதலாக
உடையதாதலால் அவனை
வழிபட வேண்டும் என்ற
வாறாயிற்று. அன்றியும்

உலகம் என்பதனை
உயர்ந்தோராக்கி எல்லாப்
பொருளினும் உயர்
வுடைத்தாகிய உயிர்கள்

RangaRakes

ஆதிபரமேஸ்வரனைத்
தமக்கு முதலாக

## பாயிரம்—1, கடவுள் வாழ்த்து.

உடைய என்றுமாம்.

அஃதேல் அவன்

முதலாயினவாறு

யாங்ஙனம் கூறினார்

எனின் பிறிதொன்று

தோற்றுதற்கு

அடியாய் நிற்பதூஉம்

பசுவயிற்றினும்
சிறப்புடைத்தாய்
முன்னென் எண்ணப்
படுவதாகும் முதல்
ஆண்டு உவமையாகக்
கூறிய அகரம் இ
நபகுதிபுர் உடைத்
தாயினும் ஏனை
எழுத்துக்களுக்கு வழி
யாய் நிற்றல்
எல்லாரானும்
அறியப்பட்டமையின்

கூறிய வெழுத்தினு ஞா
கிய சொற்களெல்லாங்
கற்றதனுலாகிய பயன்
வேறியாது? விளங்கிய
வறிவனது திரு
வடியைத்
தொழாராயின்,
(எ-று).
சொல்லினானே
பொரு
ளறியப்படுதலான்
அதனைக் கற்கவே

மெய்யுணர்ந்து
வீடுபெறலாம்;
மீண்டும் வணக்கம்
கூறியது
ஏற்றுக்கென்றுற்
கற்றதனாலாய
பயனிது
வென்பதூஉம், வேறு
கூறிற்று. "கற்பக்
கழிமடமஃகும்" *
என்றருளினார்.
2

### 3. மலர்மிசை

ஏகினான் மாணடி
சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ்
வார்.

(இ-ள்)

மலரின்மேல்
நடந்தானது
மாட்சிமைப்பட்ட திரு
வடியைச்
சேர்ந்தவரன்றே
நிலத்தின்மேல்

நெடுங்காலம்

வாழ்வார். (எ-று).

'நிலம்' என்று பொதுப்படக் கூறியவதனான் இவ்வுலகின் கண்ணும் மேலுலகின்கண்ணு மென்று கொள்ளப்படும். தொழுதாற் பயனென்னையென்றார்க்குப், போகநுகர்தலும் வீடுபெறலு

மென்று கூறுவார்

முற்படப்

போகநுகர்வாரென்று

கூறினர். 3

4.

தனக்குவமை

யில்லாதான்

றாள்சேர்ந்தார்க்

கல்லான் மனக்கவலை

மாற்ற லரிது.

(இ-ள்) தனக்கு நிகரில்லாதானது திருவடியைச் சேர்ந்தவற் கல்லது மனத்துண்டாங் கவலையை மாற்றுத லரிது. (எ-று).

* நான் மணிக்கடிகை—28.

1. "சேர்ந்தார்க்" என்பது மணக்குடவர் பாடம்.

RangaRakes

tamilnavarasam.com 3

பாயிரம்—1, கடவுள் வாழ்த்து

வீ டு

பெறலாவது, 'அவலக்

கவலைக் கையாற்றி'*
னீங்கிப் புண்ணிய
பாவ மென்று
மிரண்டினை யுஞ்
சாராமற் சாதலும்
பிறத் தலுமில்லாததொரு
தன்மையை யெய்துதல்.
அது பெறுமென்பார்
முற்படக் கவலை
கெடுமென்றார் ;
அதனால் , எல்லாத்

துன்பமும் வருமாதலின்

## 5. அறவாழி

யந்தணன்
றாள் சேர்ந்தார்க்
கல்லாற்
பிறவாழி நீந்த லரிது.

(இ-ள்)

அறமாகிய
கடலையுடைய
அந்தணனது

திருவடியைச் சேர்ந்தவர்க்கல்லது ஒழிந்த பொருளும் காமமுமாகிய கடலை நீந்தி [illegible]யேறுதலரிது, (எ-று)

அறத்தைச் சொல்லிப் பிறவெனவே அற முதலான மூன்றினும் ஒழிந்த இரண்டினும் என்பது பெறுதும்.

இது, காமமும் பொருளும் மென்றது

6. வேண்டுதல்

இதுகையாறு

கெடுமென்றது. அறம்

வேண்டும் என்றற்கு '

அறவாழியந்தணன்'

என்று பெயரிட்டார்.

பொருளுங்

காமமு

மாகாவென்றற்கு '

வேண்டுதல்

வேண்டாமை யிலான்'

என்று பெயரிட்டார்.

7. இருள்சே
ரிருவினையுஞ் சேரா
விறைவன் பொருள்சேர்
புகழ்புரிந்தார் மாட்டு.

---

1

மணிமேகலை, 4-119.

2. 'யிலா' என்பது
மணக்குடவர் பாடம்.

# பாயிரம்—1, கடவுள் வாழ்த்து.

(இ-ள்)

மயக்கத்தைச் சேர்ந்த
நல்வினை
தீவினையென்னு
மிரண்டு வினையுஞ்
சேரா, தலைவனது ஆ
கிய மெய்ப்பொருள்

சேர்ந்த புகழ்ச்சிக்
சொற்களைப்
பொருந்தினர் மாட்டு.
(எ-று) 7

தலைவனதாகிய
மந்திரங்கள் என்றும்
அமையும். பொருந்
துதல்-இடைவிடா
மலோதுதல். இது
வினைகெடும் என்றது.

8. பொ

றிவாயி லைந்தவித்தான்
பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார்
நீடுவாழ் வார்.

(இ-ள்) மெய்
வாய் கண் மூக்குச் செவி
யென்னும் ஐம்பொறி
களின் வழியாக வரும்
ஊறு சுவை ஒளி
நாற்ற மோசையென்னு
மைந்தின்கண்ணுஞ்

செல்லும் மன
நிகழ்ச்சியை
அடக்கினைது
பொய்யற்ற
வொழுக்கநெறியிலே
நின்றாரன்றே
நெடிது வாழ்வார்,
(எ.று).

இது,

சாதலில்லை யென்றது.

8

9. பிறவிப்

பெருங்கடல் நீந்துவர்
நீந்தார்
இறைவ னடிசேரா தார்[1]

.

(இ-ள்)

பிறவியாகிய பெரிய
கடலை
நீந்திக்கரையேறுவர்,
இறைவனடியைச்
சேர்ந்தவர்; சேராதவ

ரதனுவ ளழுந்துவர்.
(எ-று)

இது பிறவியில்லை
என்றது.
9

10. கோளில்

பொறியிற் குணமிலவே
யெண்குணத்தான் றாளை
வணங்காத்தலை.
(இ-ள்) அறிவில்லாத
பொறிகளையுடைய

பாவைகள் போல

ஒரு குணமுமுடைய

வல்ல,

எட்டுக்குணத்தினை

யுமுடையவனது

திருவடியினை

வணங்காத

தம்பியினையுடைய

உடம்புகள், (எ-று).

உயிருண்

டாகில் வணங்குமென்

பற்றிக் கூறியவாறு கண்டுகொள்க.

10

—:—

---

1. 'துவர்' என்பது மணக் குடவர் பாடம்.





## 2. வான் சிறப்பு

வான்:

சிறப்பாவது

மழையினது தலைமை

கூறுதல்.

இது கடவுட் செய்கைத்தாதலான் அதன்பிற் கூறப்பட்டது. இஃதீண்டுக் கூறியதென்னையெனின், பின்னுரைக்கப் படுகின்ற

இல்லறமுந் துறவறமு

மினிது நடப்பது

மழையுண்டாயி

னென்றற்குப்

போலும்; அஃ றியும்,

மங்கலத்தின்

பொருட்டுக் கூறினா
ரெனினும் அமையும்.

11.

சிறப்பொடு பூசனை
செல்லாது வானம்
வறக்குமேல்
வானோர்க்கு மீண்டு.

(இ-ள்) தேவர்களுக்கு இவ்விடத்துச் செய்யப்படுகிற விழவும் பூசனையும் நடவாது வானம் புலருமாயின், (எ-று)

உம்மையால் முனிவர்க்குமென்று கொள்ளப்படும். மழை பெய்யாக்கால் வருங் குற்றங் கூறுவார் முற்பட நால் வகைப்பட்ட

அறத்தினும் பூசை
கெடுமென்றார்.

12. தானந்
தவமிரண்டுந் தங்கா
வியனுலகம்
வானம் வழங்கா
தெனின்.

(இ-ள்) தானமுந் தவமுமாகிய விரண்டறமு முளவாகா; அகன்ற வுலகத்துக்கண் மழை பெய்யாதாயின், (எ-று).

இது, தானமுந் தவமுங் கெடுமென்றது. 2

13. நீரின்
றமையா துலகெனின்

யார்யார்க்கும் வானின்

றமையா தொழுக்கு.

(இ-ள்)

நீரையின்றி யுலகம்

அமையாதாயின்,

யாவர்க்கும் மழையை

யின்றி ஒழுக்கம்

உண்டாகாது. (எ-று)

ஒழுக்கம்-விரதம்,

இஃது, ஆசா

ரங்கெடுமென்றது.

இவை மூன்றினானும்

நால்வகையறமுங்

கெடுமென்று கூறினார்.

3

14. விண்ணின்று

பொய்ப்பின் விரிநீர்

வியனுலகத்

துண்ணின் றுடற்றும்

பசி.

RangaRakes

விரிந்த நீரினையுடைய அகன்ற வுலகத்திடத்தே நின்று பசியானது வருத்தாநிற்கும்; எல்லாவுயிரையும், (எ-று).

பொய்த்தல் - தன்றொழில் மறுத்தல். இது, 'பசி' என்று

பரிது.

(இ-ள்: )

வ ாலிளின் று ।

துளிவீழினல்லது அவ்

விடத்துப் பசுத்த

புல்லினது தோற்றமுங்

காண்டல் அரிது,

(எ-று).

ஆங்கிகன் பதனை

அசை யாக்கினு

மமையும், இஃது,

, (எ-று)

இஃது,

உழுவாரில்லை

யென்றது.

17.

நெடுங்கடலுந்

தன்னீர்மை குன்றுந்

தடிந்தெழிலி தானல்கா தாகி விடின்.

5

புயலாகிய வாரிபி

6

தடிந்தெழிலி

(இ-ள்        )

நிலமேயன்றி நெடியகடலும் தனது தன்மை குறை யும், மின்னரி மழையானது பெய்யாவிடின், (எ-று).

தடிந்தென்பதற்குக், கூறுபடுத்து என்று

பொருளுரைப் ப ாரு
முனர். இது, நீருள்
வ ாழ்வனவும்
படுவ ன வு ங்
கெடுமென்றது . இவை
ந ான்கி னு னும்
பொருட்கேடு கூறினர்;
பொருள்கெட இல்
பக்கெடு மென்பதனல்
இ ன் பக்கேடு
கூறிற்றிலர் .

7

1 8 .

கெடுப்பதூஉ ங் கெட்

டார்க்குச் சார்வாய்மற்

றுங்கே

எடுப்பதூஉ மெல்லா

மழை.

(இ-ள் )

பெய்யாதே நின்று

எல்லாப்பொருளை யுங்

கெடுப்



7

## பாயிரம்—2, வான்சிறப்பு.

பதுவும், அஃகெடப் பட்டார்க்குத் துணையாய்த் தான் பெய்து பொருள்களெல்லாவற்றையும் அவ் விடத்தே

யுண்டாக்குவதூஉம்
மழையே (எ-று).

இஃது,

இரண்டினையுஞ்
செய்யவற்
றென்றவாறு.

19. துப்பார்க்குத்
துப்பாய துப்பாக்கித்
துப்பார்க்குத் துப்பாய
தூஉ மழை.

(இ-ள்)

பிறிதொன்றுண்பார்க்கு
அவருண்டற்கான
வுணவுகளையு
முண்டாக்கித், தன்னை
யுண்பார்க்குத் தானே
உணவாவதும் மழை,
(எ-று).

உணவாக்கி

என்றது உணவாய
உணவாக்கி என்றது
உயிர்ப் பன்மையை

நோக்கி அவரவர்
உண்ணத்தகுவன
(எ-று).

இது, பசியைக்
கெடுக்குமென்றது.
9

20. ஊனின்
றுலகம் வழங்கி
வருதலாற்
றுனமிழ்த
மென்றுணரற் பாற்று.

(இ-ள்)

மழைவளம் நிலை நிற்க உலகநடை தப்பாது வருதலான், அம் மழைதான் உலகத்தார் அமிர்தமென்று உணரும் பகுதியது. (எ-று).

இஃது. அறம் பொருளின்பங்களை யுண்டாக்குதலானும்,

பலவகைப்பட்ட

வுணவுகளை நிலை

நிறுத்துதலாலும், இம்

மையி

யினை மற்றுள்ள பூத

தலைமை கூறிற்று.

3.

மாத்திரமாக நினைக்கப்

படாதென்று இதன்

—:—

# நீத்தார் பெருமை

நீத்தார் பெருமையாவது துறந்த முனிவரது பெருமையைக் கூறல்.

இது கடவுளரை வணங்கினாற்போல வேண்டுமென்பதனானும் அவையடக்கக் கிற்றின்பிற் கூறப்பட்டது.

முனிவரையும் வணங்க
கருத்திறனும் அவை



8

பாயிரம்—3. நீத்தார்
பெருமை

21. ஒழுக்கத்து
நீத்தார் பெருமை
விழுப்பத்து

வேண்டும்
பலுவற் றுணிவு.

(இ-ள்)
ஒழுக்கத்தின்
பொருட்டு எல்லாப்
பொருளையுந் துறந்த
து பெருமையை
நூல்களின் துணிவு
விழுப்பத்தின்
பொருட்டு வேண்டும்,
(எ-று).

யாதானுமொரு
பொருளைச் சொல்லும்
நூலும் தன்னையியல்
வாருங் கொண்
டாடுதற்காகத்
துறந்தார்
பெருமையை நன்கு
மதித்துக் கூறும்;
அதனையானுங்
சொல்லுகின்றே
னென்பது கருத்து.

மைன்றே; அதனை
அவ்வாறு காணாது
கூறுபடுத்துக்
காணாக்காரனைந்
தோற்றுமாதலால்,
காரியமான வுலகம்
அறிவான் கன்னைதா
மான்றவா ருயிற்று.
இஃது உலகினும் பெரிய
தென்றது 4
25. ஐந்துவித்தா

இந்திரன்
சான்றென்றது,
இவ்வுலகின்கண் மிக்க
தவஞ் செய்தவருளராயின்,
அவன் தன்பதம்
இழக்கின்றானாகத் தடுங்கு
மாதலான். இது
தேவரினும்
வலியனென்றது.
5

## 26. இருமை

வகைதெரிந் தீண்டறம்
பூண்டார்
பெருமை பிறங்கிற்
றுலகு.

(இ-ள்) பிறப்பும்
வீடுமென்னு
மிரண்டினது கூறுபாட்
டை யாராய்ந்து இவ்வி
டத்தே துறவறத்தைப்
மேற்கொண்டவரது
பெருமையே உலகத்தில்

மிக்கது, (ஏ-று)

## இஃது.

எல்லாராலும்

போற்றப்படுமென்றது.

ரீ,

## 27. நிறைமொழி

மாந்தர் பெருமை நிலத்து

மறைமொழி காட்டி

விடும்.

பாயிரம்—3, நீத்தார் பெருமை.

(இ- ள்) .

நிரம்பிய கல்வியையுடைய மாந்தரது பெருமையை

அவராற் சொல்லப்பட்டு நிலத்தின்கண் வழங்காநின்ற மந்திரங்கள் காட்டும், (எ-று).

இஃது. அவராணை நடக்குமென்று கூறிற்று. 7

28 .

குண மென்னுங்

குன்றேறி நின்றார்

வெகுளி

கணமேயுங் காத்த

லரிது.

(இ-ள்)

குணமாகிய மலையை

மேற்கொண்டு

நின்றார்மாட்டு

உளதாகிய வெகுளியால் வருந்தீமையைச் சிறிது பொழுதாயினும் வாராமற் காத்தலரிது.

நகுஷன் பெரும்பாம்பாயினன். இது, வெகுளி பொறுத்த லரிதென்றது.
8

# 2 9 .

**செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர் செயற்கரிய செய்கலா தார்.**

(இ-ள்) செயற்கு அரியன செய்வாரைப் பெரியரென்று கொள்ளப்படும்; அதனைச் செய்ய மாட்டாதாரைத் துறந்தா ராயினுஞ் சிறியரென்று கொள்ளப்படும், (எ-று).

செயற்கரியன-இயம நியம முதலாயின. இவ்வதிகாரம் துறந் தார் பெருமையென்று கூறப்பட்டதாயினும், துறவு மாத்திரத்தானே பெரியரென்று கொள்ளப்படாது; செயற்கரியன செய்வாரையே பெரியரென்று கொள்ளப்படுவதென்று கூறப்பட்டது.

30. அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான்.

(இ-ள்) எல்லாவுயிர்க்குஞ் செவ்விய தட்பஞ்செய்தலை மேற்கொண்டொழுகலான, அந்தணரென்போரையும் துறந்தாராகக் கொள்ளப்படும்,

(எ-று).

மேல்

துறந்தவர்களினுஞ்

RangaRakes

சிறியாருளரென்று கூறினார்: திரு

tamilnavarasam.com

31

சிறப்பீனுஞ் செல்வமு
மீனு மறத்தினூஉங்
காக்க மெவனோ
வுயிர்க்கு.

(இ-ள்)

முத்தியையுந்தரும்
செல்வத்தையும் தரும்
ஆகலால், அறத்தினின்மேல்
உயிர்கட்கு
ஆக்கமாவது

# 12

## பாயிரம்—4,

## அறன்வலியுறுத்தல்.

(இ-ள்) பின்பே அறிந்துகொள்கின்றேமென்னாது முன்பே அறத்தைச் செய்க; அது சாங்காலத்துஞ் சாவாதே நின்று பிறக்குமிடத்துத் துணையாம்.

## இஃது,

அறஞ்செய்யுங்கால்

விரைந்து

செய்யவேண்டுமென்

## 1. பாயிரம்—4,
## அறன்வலியுறுத்தல்

.

37. செ
யற்பால தோரு
மறனே யொருவற்
குயற்பால தோரும்
பழி.

(இ-ள்)

செய்யாமையின்
மேற்பட்ட கேடு [illegible]
[illegible]: (எ-று).

இஃது.

அறஞ்செய்யாக்காற்
கேடுவருமென்று
கூறிற்று. 8

39. அழுக்கா
றவா வெகுளி
யின்னாச்சொ னான்கு
மிழுக்கா வியன்ற

கூறும்.

(இ-ள்)

மனக்கோட்டமும்,

ஆசையும்

வெகுளியும் கடுஞ்

சொல்லும் என்னும்

நான்கினையும்

ஒழித்து நடக்குமது

யாதொன்று,

அஃது அறமென்று

சொல்லப்படும், (எ-று)

)-

பின்னோர்ச்

செய்யலாகாதென்று

கூறுவனவெல்லாம்

இந்நான்

கினுள் அடங்கும். /

மேற்கூறிய அறம்

எத்தன்மைத்தென்றார்க்கு

இது கூறப்பட்டது.

40.

மனத்துக்கண் மாசில
னாத லனைத்தற
னாகுல நீர பிற.

(இ-ள்)

ஒருவன் தன்
மனத்தின்கண்
ஓரழுக்கு மிலனாவதே
எல்லாவறமுமாவது;
அதனின்
அழுக்குண்டாயிருக்கச்
செய்வன

வெல்லாம் ஆரவார
நீர்மையன (எ-று).
பிறரறியவேண்டிச்
செய்தாஞ
மென்றவாருயிற்று.
மேல்

நான்கு பொருளைக்
கடிய
வேண்டுமென்ருர்;
அவை நான்கும் மன
மொன்றாந்

தூயதாகப்
பேசமென்று அதன்
பிற் கூறப்பட்டது.
10

பாயிரம் முடிந்தது.

—:—

1. 'ஸிங்கில்லோம்'
என்பது மனக்குடவர்
பாடம்

2.

# இல்லறவியல்

(20)

இனி,

இல்லற மாவது இல்லின்க ணிருந்து தானமுதலாயின செய்தல். அது கூறிய

அதிக ாரமிருபதிறு ம்
இல் வ ா ழ் வ ான்
வா ழுந் திற
மோரதிக ாரத்தாறு ம்
அதற்குத் துணையான
மனைவி யிலக்கணம்
ஓதிக ாரத்த ாறு ம்
கூறி, அதன்பின் இ
ல் ல ற ப்
பகுதியான பிரமசரியங்
காரு கத்திவிவெ மன்று

மி ரண் டி ஞுள் ளும்
பிரமசரியமாகிய
புதல்வ ரைப்
பெறுதல் ஓதிகா
ரத்தாளுங் கூறிக் க
ருகத்திய லிலக்
கணங் கூறுவார்
நல்கூர்ந்தார் ,
நல்குரவினிங்கினர் .
செல்வர் வள்ளியோ
ரென்னு ம்

நால்வரினும்
அன்புடைமை
முதலாக
ஒழுக்கமுடைமை
யீறுக
நல்கூர்ந்தாரால்
செய்யப்படுவன
வேழும் . பிறனில்
விழையாமை
முதலாகத்
தீவினையச்ச மீறுகா

து ல் செல்வராற்

செய் ய ப் படுமாறு

கூறி. இவற்றோடுங்

கூ ட ப் புகழ்

வள்ளி- யோராற்

செய் ய ப்படுமென்று

கூறினராகக்

கொள்ளப்ப டும்

என்றவ ாறு.

இவ்வறம் முற்படக்

கூறியது ,

துறவறத்தினின்
ருரையும் ஓம்புதல்
இல்வ ாழ்வ ான்
கண் ணை தாதலான்
அவற்றுள்.

1.

# இல்வாழ்க்கை

இல்வாழ்க்கையாவது
இல்லின்கண் இரு

ந் து வாழ்வார்
வொழுந்திறன்
கூறுதல். மேல்
அறஞ்செய்யவே
ண்டுமென்றூர். இது
மு த லா க
அறஞ்செய்யுமாறு
கூறப்பட்டது.

RangaRakes

கூறுகின்றூராதலின்.
அதன் பிற்

## 2. இல்லறவியல்—1.

## இல்வாழ்க்கை.

41. இல்வாழ்வா
னென்பா னியல்புடைய
மூவர்க்கு
நல்லாற்றி னின்ற
துணை.

(இ-ள்)

இல்வாழ்வானென்று
சொல்லப்படுபவன்
இயல்புடைய மூவர்க்கும்
நல்லவழியின்கண்ணே
நின்றதொருதுணை,
(எ-று).
என்றது,
தானமாகிய இல்லறஞ்
செய்யுமவன் தவத்தின்
பாற்பட்ட
விரதங்கொண்

டொழுகாநின்ற
பிரமச்சாரிக்கும்
தவமேற்கொண்
டொழுகாநின்ற
வானப்பிரஸ்தர்
ஸந்நியாசிகளுக்கும்,
தத்தம் நிலைகுலையாமை
யுணவு முதலாயின
கொடுத்துப் பாதுகாத்
தலின். அவர்க்கு
நல்லொழுகின்கண்

செல்லும் நெறியிலே

நின்றார்க்கு

துணையென்று

கூறியவாறாயிற்று.

துணையென்றது

இடையூறு வாராம

ஓய்த்து விடுவாரை.

1

2.

துறந்தார்க்குந் துவ்வா

தவர்க்கு மிறந்தார்க்கு

மில்வாழ்வா
னென்பான் றுணை.

(இ-ள்)

வருணத்தினையும்
ஆச்சிரமத்தினையுந்
துறந்தார்க்கும்,
துறவாது
நல்குரவாளரா
யுண்ணாப்
பெருதார்க்கும்,

பிறராய் வந்து
செத்தார்க்கும்
இல்வாழ்வானென்று
சொல்லப்படுமவன்
துணையாவான். (எ-று).

மேற்கூறிய

மூவரும்
வருணாச்சிரமங்களைத்
துறவாமையால் வீண்டுத்
துறந்தாரென்று
கூறப்பட்டது.

செத்தார்க் கிவன்
செய்ய வேண்டுவது
புறங்காட்டுய்த்தல்
முதலாயின செய்ய
வேண்டுதலின். இது.
மேற்கூறியவரே யன்றி
இவர்க்கும்
துணையென்று கூறிற்று.
2

தென்புலத்தார் தெய்வம்
விருந்தொக்க
லானென்றாங் கைபுலத்தா
றோம்ப றலை.

(இ-ள்)

பிதுரர், தேவர்,
புதியராய் வந்தார்,
சுற்றத்தார்,
தானென்று
ஐந்திடமாகிய

நெறியைக் கெடாமை

லோம்புதல் தலையான

இல்வாழ்க்கை, (எ-று).





2. இ

ல்லறவியல்—இல்வாழ்க்கை

என்றது

தனக் கு ண் டான

பொருளை ஆறு
கூறாக்கி ஒருகூறு
அரசற்குக் கொடுத்து
ஒழிந்தவைந்து கூறினுந்
தான் கொள்வது ஒரு
கூறென்றற்குத்
தன்னையு
மெண்ணப்பட்டது .
இது தலையான இல்
வாழ்க்கை வாழுந்
திறம் கூறிற்று;
என் னை?

இ ை வ ி ய ல்லை

ெ ம ாரு ங்கு

செய் யப்படுதலின் .

மேற்கூறிய அறுவரும்

விருந்தினது

வகையினரென்று

கொள்ளப்ப டு ம்.

3

44.

பழியஞ்சிப் பாத்தூ

ணுடைத்தாயின்

வாழ்க்கை வழியெஞ்ச
லெஞ்ஞான்று மில்.

(இ-ள்) இல்வ
ாழ்க்கையாகியநிலை
பழியையஞ்சிப் பகுக்
துண்டலையுமுடைத்தாயின்
. தனதொழுங்கு
இடையறுதல் எக்காலத்
திலுமில்லை, (எ-று).

மேற்
பகுக்குமாறு கூறினர்,

பகுக்குங்கால்
பழியொடுவாரா
பொருளைப்
பகுக்கவேண்டுமென்று
கூறினார்.
4 45. அன்பு
மறனு முடைத்தாயி
னில்வாழ்க்கை பண்பும்
பயனு மது.
(இ-ள்)
இல்வாழ்க்கையாகிய

நிலை யாவர்மாட்டும்
அன்பு

செய்தலையும்
அறஞ்செய்தலையு
ம் உடைத்தாயின்,
அதற்குக் குணமா

வதும் பயனுவதும்
அவ்விரண்டினை
யுமுடைமை (ஏ-று).

பயன் வேறு வேண்டா;
தனக்கும் பிறர்க்கும்
உண்டான மூக

மலர்ச்சி தானே
யமையுமென்பதாம்
பழியொடு
வாராவுணைவைட்
பருக்குங்கால்
ஏற்பார் மாட்டு அ
ன்புசெய்
யவேண்டுமென்பதாஉம்
சீலவாறுகைக்
கொடுக்கவேண்
டுமென்பதாஉம்
கூறிற்று. 5

46. அறத்காற்றி
னில்வாழ்க்கை யாற்றிற்
புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ
தெவன்.
(இ-ள்)
இல்வாழ்க்கையாகிய நி
லையை
அறநெறியிலே
செலுத்தவல்லனாயின்,
பறநெறியாகிய

அவ்வாறு செய்யின்
தவப்பயனும் இது
தானே
தருமென்றவாறு
6

-

47. ஆற்றி

னொழுக்கி யறனிழுக்கா
வில்வாழ்க்கை
நோற்பாரி னோன்மை
யுடைத்து.

(இ-ள்)

பிறரையும்
நன்னெறியிலே
ஒழுகப்பண்ணித்தானு
ம் ·ஈ,ற,த்திற்றன்
பாலொழுகும் இல்வ
ாழ்க்கை
தவஞ்செய்வாரினும்
வ·ıiயுடைத்து. (எ-று)

·

பிறரை ஒழுகப்
பண்ணுதலாவது
அவர்க்கு

வேண்டுவன
அமைத்தல். இது.
தவத்தினும் வலியு
டைத்தென்றது.

48. இயல்பினா
னில்வாழ்க்கை
வாழ்பவ னென்பான்
முயல்வாரு
ளெல்லாந் தலை.

(இ - ள்)
நெறியினானே

யில்வ ாழ்க்கையை
வ ா ழ் பவ
ெ ன ன் ப ா ன் ,
மு யல் வ ா ெ
ர ல்ல ா ரினுந்
தலையாவன், (எ-று).
முயறல்-பொருட்கு
முயறல்; என்னை?
வித்து மிடவேண்டுங்
ெகா ல் ே ல ா
வி ருந் தே ா ம் பி ,
மிச்சின் மிசைவ ான்

புலம் என்றாராகலின்
இதனானே பொருளும்
உண் டா மென்று
கூறினார் .
8

49. வையத்துள்
வாழ்வாங்கு
வாழ்பவன்
வானுறையுந்
தெய்வத்துள்
வைக்கப் படும்.

(இ-ள்)

இல்வாழ்க்கை

வாழும்படியிலே

வாழுமவன், உல

கத்திலே தேவருள்

ஒருவனாக

மதிக்கப்படுபவன்,

(எ-று).

இது, இவன்

எல்லாராலும்

மதிக்கப்படுவ

னென்றது 9

5 0 .

அறனெனப் பட்டதே
யில்வாழ்க்கை யஃதும்
பிறன்பழிப்ப தில்லாயி
னன்று.

(இ-ள்)

அறனென்று .
சிற ப்பித்துச்
சொல்லப்பட்டது இல்
வ ாழ்க்கையே ய ,

அத்தன்மை மத்த ாகி ய அதுவும் நன்குவது பிறனொரு வறை ப ழிக்கப்படுவதொன்றை

RangaRakes

யுடைத்தல்லவாயின், (எ-று).





## 2. இல்லறவியல் —இல்வாழ்க்கை

பழிக்கப்படுவதென்றது

இழிகுலத்தாளாகிய

மனையாளை, இல்வ

ாழ்க்கைத் துணைநலங்

கூறுகின்றாராகலின், இது

பிற்கூறப்

பட்டது.

## 2. வாழ்க்கைத்

## துணை நலம்

வாழ்க்கைத்
துணைநலமாவது
இல்வாழ்க்கைத்
துணையாகிய மனையாளது
பெண்மை யிலக்கணங்
கூறுதல் . இஃது
ஈண்டுக் கூறிய தென்னை?
மனையாளிலக்கணமாயிற்
காமத்துப் பாலுட் கூறற்
பாற்றெனின் இது
மனையாளாற்
செய்யப்படும்

தருமமாதலான் ஈண்டுக்
கூறப்பட்ட தென்க.
இல்வாழ்வார்க்கு
மாட்சிமைப் பட்ட
மனையாளோடும் வாழ
வேண்டுதலின் அதன்பின்
கூறப்பட்டது.

51. மனைத்தக்க
மாண்புடைய
ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத்
துணை.

(இ-ள்) தான்

பிறந்த குடிக்குத்தக்க வெ

ாழுக்கத்தையுமுடைய

ளாய்த் தன்னைக்

கொண்டவனது

வருவாய்க்குத் தக்க

செலவினையு முடையவள்

இல்வாழ்க்கைத்

துணையாவள், (எ-று).

இது ஒழுக்கமு

ம் புகுதிக்குத்தக்க

செலவுமுடையளாக வேண்

டும் என்றது.
1

52. மனைமாட்சி
யில்லாள்க ணில்லாயின்
வாழ்க்கை
யெனைமாட்சித்
தாயினு மில்.

(இ-ள்)
குடிக்குத்தக்க வொழுக்கம்
மனையாள்மாட்டு இல்லை
யாயின், அவ்
வில்வாழ்க்கை எல்லா

நன்மைகளை
யுமுடைத்தாயினும் ஒரு
நன்மையும் இன்றும்,
(எ-று).

வருவாய்க்குத் தக்க
செலவினளாகவே இல்வ
ாழ்க்கை இனிது
நடக்கும்.
ஒழுக்கக்
குறைபாடுண்டாலை்
என்றூர்க்கு இது
கூறப்பட்டது.
RangaRakes

வரும் குற்றமென்னை

## 2. வாழ்க்கைத் துணை நலம்.

53.

சிறைகாக்குங்
காப்பெவன் செய்யு
மகளிர் நிறைகாக்குங்
காப்பே தலை.

(இ-ள்)

மகளிரைச்
சிறைசெய்து காக்
குங்காவல்யாதனைச்
செய்யும்? அவரது
கற்புக் காக்குங்
காவலே தலையான
காவல், (எ-று)

3

'மேற்கூறிய
ஒழுக்கம் சிறை செய்து
காக்க உண்டாகாதோ'
என்றார்க்கு, 'அது

செய்தாலும்
நிறையிலராகில்
அழியும், இரண்டும்
வேண்டும்
என்பதூஉங் கூறிற்று.

54.

பெண்ணிற்
பெருந்தக்க யாவுள
கற்பென்னுந்
திண்மையுண் டாகப்
பெறின்.

(இ-ள்) பெ
ண் பிறப்புப்போல
மேம்பட்டன
யாவையுள? கற்பாகிய
திண்மை யுண்டாகப்
பெறின், (எ-று).
'மேல்
வேண்டும் என்ற
நிறையுடைமை குல
மகளிர்க்கு
இயல்பன்றோ'
என்றார்க்கு, அஃது

எல்லார்மாட்டும்
உளதாகா தென்று கூற
ப்பட்டது.
4

55. புகழ்புரிந்
தில்லிலோர்க் கில்லை
யிகழ்வார்முன்
னேறுபோற் பீடு
நடை.

(இ-ள்)
புகழ்பொருந்தின

மனையாளை
இல்லாதார்க்கு இல்லை
யாம், தம்மை
யிகழ்ந்துரைப்பார்முன்
ஏறுபோல நடக்கும்
மேம்பட்ட நடை,
(எ-று).

ஏற்று நடை-அசைவும்
தலையெடுப்பும் (
பொருந்திய நடை.)

'மனையாளொழுக்கக்

குறைபாட்டால் குற்றமெ
மன்னை' யென்றார்க்கு,
'அதனானே வந்தால்
பின் இல்வாழ்க்கைத்
தருமம்
கூறுகின்றாராதலின்
பிற் கூறப்பட்டது.

56.
இல்லதெ னில்லவண்
மாண்பானா
னில்லவண்
மாணாக் கடை.

(இ-ள்) ஒருவனுக்கு மனையாள் மாட்சிமையுடையளானால், எல்லாமிலனேயாயினும் இல்லாததியாது? மனையாள் மாட்சிமை இலளானால், எல்லா முடையானாயினும் உண்டானதி யாது? (எ-று)·

இஃது ஒன்றும் நன்றாக மற்றுள்ள இன்மை தோன்றாது. அது போல இஃதொன்றும் தீ தாக மற்றுள்ள உடைமையும் தோன்றா தென்றது. இத்துணையும் மனையாளொழுக்கமுடையளாக வேண்டு மென்றவாறாயிற்று. 6

# 57. தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற சொற்காத்துச் சோர்விலாள் பெண்.

(இ-ள்) தன்னையுங் காத்துத், தன்னைக்கொண்டவனையும் பேணி, நன்மையமைந்த புகழ்களையும் படைத்துச் சோர்வின்மை யுடையவளைப் பெண்ணென்று சொல்லப்படும் (எ-று)

புகழ் படைத்தலாவது. அறம்

பொருள்
இன்பங்களைப் பற்றி
யுலகத்தார் பழியாமல்
ஒழுகி றல் அவரால்
நன்மை சொல்லப்
பெறுதல்.
சோர்வின்மையாவது,
அப்பொருளைக்
கடைப்பிடித்தல்
இஃதொழுகுந்திறன்
கூறிற்று. இதனானே

பெண்மையிலக்கண ர்
எல்லாம் கூறப்பட்டது.

7

58. தெய்வந் தொ
ழாஅள் கொழுநற்
றொழுதெழுவாள்
பெய்யெனப்
பெய்யு மழை.

( இ-ள் )
தெய் வத்தைத்
தெ ய் வ மென்று

தொழாளாய், எல்லாத்
தெய்வமுந் தன்
கணவனென்றே க ரு
தி, அ வ ணை
நாடொறுந் தொழுதெழுமவள் பெய்யென்று சொல்ல மழை பெய்யும், (எ-று).

எழுதல்-உறங்கி எழுதல், தெய்வமும் ஏவல் செய்யுமென்று மேற்கூறிய ஒழுக்கத்தான் இம்மைப்பயன் கூறிற்று 8

# 59. பெற்றார்ப் பெறிற்பெறுவர் புத்தேளிர் வாழு முலகு.

RangaRakes

பெண்டிர்
பெருஞ்சிறப்புப்

# 21

# வாழ்க்கைத் துணை நலம்

(இள்-) பெண்டிரானவர் தம்மை மனைவியாகப் பெற்ற வரையே தமக்குத் தலைவராகப் பெறின், தேவரால் வாழப்பட்ட பெரிய சிறப்பினையுடைய உலகத்தைப் பெறுவர், (எ-று)

இதனானே அதனின் மாறுபட ஒழுகினார் நரகம் புகுவர் என்ற வாறாயிற்று. இது மறுமைப் பயன் கூறிற்று. இவை மூன்றி னானும் பெண்டிரிலக்கணமும் அவர் பெறும் பயனும் கூறப்பட்டது.

## 60. மங்கல

## மென்ப மனைமாட்சி

## மற்றத

## னன்கல நன்மக்கட்

# பேறு.

(இ-ள்) ஒருவனுக்கு அழகென்று சொல்லுப, மனையாள் ஒழுக்கமுடையளாதலை; அவ் வழகின்மேலே நல்ல அணிகலனென்று சொல்லுப, நல்ல புதல்வரைப் பெறுதலை, (எ-று)

பின்பு புதல்வரைப் பெறுதல் கூறுகின்றாராதலின் இதுபீற் கூறப்பட்டது. 10

# 3.

# புதல்வரைப் பெறுதல்

புதல்வரைப்
பெறுதலாவது
புதல்வரைப்

பெற்றதலையாய
பயன்கூறுத ஸ்
இஃதீண்டுக் கூறிய
தென்னை,
பெறுபேறாதலின்
பொருட்பாலிற் கூ
றற்பாற்று
எனின் ?
இவண்டத்துகின்ற
இல்வாழ்க்கைக்கு
மனைவியர்

துணையாயினாற்
போலப் புதல்வரும்
துணையாவா
ரென்றற்கும்,
இல்வாழ்க்கை
இடையறாமற் சேறற்
காகவும், அவரைப்
பெற்றால் வளர்க்கும்
திறன் கூறுதல் நால்
வகைப் பட்ட
ஆச்சிரமத்தினும்

பிரம்சரிய ம்

கூறுதலாமா தலாறு ம்

அ வ ரா னே

நல்வினைப்பயன் பெற

மாதலாலும் ஈண்டுக்

கொள்ளப்

பட்டதென்று

கொள்ளப்படும்.

RangaRakes

மேலததேனடியையபுமிது.

## 3. புதல்வரைப் பெறுதல்

61.

பெறுமவற்றுள்
யாமறிவ தில்லை
யறிவறிந்த மக்கட்பே
றல்ல பிற.

(இ-ள்) ஒருவன் பெறும் பொருள்களுள் அறிவுடைய மக்களைப்

பெறுதல் போலப் பயன்படுவது ஒழிந்த பொருள்களெல்லாவற்றினும் யாம் கண்டறிவதில்லை,

(எ-று).

பிறபொருளாயின் ஒருபிறப்பளவு முடியநில்லாது. இது இருமைக்கும் துணையாதலால் புதல்வரைப் பெறவேண்டும் என்றது. 1

## 62.

எழுபிறப்புந் தீயவை

தீண்டா பழிபிறங்காப்

பண்புடை மக்கட் பெ

றின்.

(இ-ள்)

எழுபிறப்பினுந்

துன்பங்கள் சாரா; ஒரு

பிறப்பிற்

பழியின்கண் மிகாத குணத்தினையுடைய புதல்வரைப் பெறுவராயின்,
(எ-று).

அறம்பொருள்

இன்பம் என்றும்

மூன்றும் பயக்கும்

என்பார்

முற்பட அறப்பயன்
எய்தும் என்று
கூறினர். அன்றியு
ம்

தன்னளவும் பிறந்த
முன்புள்ள எழுவர்க்கும்
எனினும் அமையும். 2

63. தம்பொரு
ளென்பதம் மக்க ளவர்
பொருடந்தம் வினையான்
வரும்.

(இ-ள்)

தம்முடைய பொருளென்று சொல்லுவர் உலகத்தார் தம்மக்களை; அம்மக்களுடைய பொருள்கள் தந்தாமுடைய வினையோடே கூடவருமாதலான், (எ-று).

மக்களுக்குண்டான பொருளும் தமக்குண்டான பொருளோடொத்த இயல்பிற்றாய் இம்மை மறுமைக்கண் இன்பம் பயத்தலிற் பொருளாகுவாரும் மக்கள் என்று கூறிற்று. 3

64. அமிழ்தினு மாற்ற வினிதேதம் மக்கள்

இது ஊறும் ஓசையும் இனிதாமென்றது. ஒளியும் நாற்றமும் சொல்லாராயினர், அது செயற்கையானும் வருமாதலான். 5

66. குழலினி

தியாழினி தென்பதம்

மக்கண்

மழலைச்சொற் கேளா

தவர்.

(இ -ள்)

குழலோசை யினிது,

சொல்லுவர் தம்

மக்களது மழலைச்

கேட்டவர் சொல்லார்,

(எ-று).

பிறவ ாற்றுனும்
தருமின்பமும்

யாழோசை யினிதென்று
சொற்களைக் கேளாதவர்.
இதனைடொவ்வாதென்றது
இதனானே
மற்றுள்ள
பொறிகளான்
வருமின்பமும்
சொன்றைாகக்
கொள்ளப்படும்,

ஒன்றெனு

முடித்தலென்பதனுன்.

6 67. தந்தைம

கற்காற்று நன்றி யவை

யத்

முந்தி யிருப்பச் செயல்.

(இ-ள்) தந்தை

மகனுக்குச் செய்யும்

உபகாரம், அவைக்

களத்தின்கண்ணே

முந்துற்றிருக்குமாறு

கல்வியுண்டாக்குதல்,
(எ-று)

இது புதல்வரைக்
கல்வியுண்டாக்குக
என்றது. 7

68. தம்மிற்றம் மக்க
ளறிவுடைமை
மாநிலத்து மன்னுயிர்க்
கெல்லா மினிது.

(இ-ள்) தம்மக்க
ளறிவுடையராதல்

அது தம்மினும்
உலகத்துமன்னுயிர்க
ட்கெல்லாம் இனிதாம்,
(எ-று).

RangaRakes

tamilnavarasam.com

24

3. புதல்வரைப்
பெறுதல்
மேல்
புதல்வரைக் கற்பிக்க

வேண்டுமென்றார்,

அதனாற்.

பயனென்னையென்றார்க்கு,

அவர் நன்னெறியி

னொழுகுதலானே தமக்கும்

பிறர்க்கும்

இனிமையுண்டாமென்று

கூறப்பட்டது. 8

69.

ஈன்ற பொழுதிற்

பெரிதுவக்குந்

தன்மகனைச் சான்றோ

ணைக்கேட்ட த்தாய்.

(இ-ள்)

தான்பெற்ற

காலத்தினும் மிக

மகிழும், தன் மகனைச்

சான்றோனெனப் பிறர்

சொல்லக்

கேட்டகாலத்துத்தாய்,

(எ-று). யாது மறியாத

பெண்டிரும்

மகிழ்வரென்று கூறிற்று

9

70.

மகன்றந்தைக் காற்று
முதவி யிவன்றந்தை
யென்னோற்றான்
கொல்லென்றுஞ்[1]
சொல்.

(இ-ள்) மகன்
தந்தைக்குச் செய்யும்
உபகாரம், இவன்
தந்தை என்ன
தவஞ்செய்தானென்று
உலகத்தார்

சொல்லுஞ் சொல்லைப்
படைத்தல், (எ-று).

இது,
நெறியினொழுகுவாரை
உலகத்தார்
புகழ்வராதலான்,
மகனும்
ஒழுக்கமுடையனாக
வேண்டுமென்றது.
இவ்வதிகாரத்துப்
புதல்வரைக் கற்பிக்க

வேண்டும் என்றத

ஞனும் புதல்வன்

உலகத்தார் புகழுமாறு

ஒழுகவேண்டும் என்றத

ஞனும் நால்

வகைப்பட்ட

ஆச்சிரமத்தினும்

இல்வாழ்வான்

இலக்கணம்

அன்புடைமை

முதலாகக்

கூறுகின்றாராதலானும்

முற்படப் பிரமசரிய விலக்கணம் கூறியவாறாயிற்று.

10

# 4.

# அன்புடைமை

அன்புடைமையாவது தன்னைச் சார்ந்தார் மாட்டுக் காதலுடையவனாதல். எல்லாக் குணங்களிற்

சிறந்த தாகலின்

முற்படக் கூறினார்.

அன்பு சிறந்த வ

ாறென்னையெனின்?

ஈண்டுக்

---

¹ 'மகாலெனும்' என்பது மணக் பாடம்.

---





# 4. அன்புடைமை

கூறுகின்ற அறம்

தானமாதலின்,
அஃதன்பிலார் மாட்டுச்
சென்று எற்பாரின்றாம்
என்பதனால் அன்பு
சிறந்ததென்க.

71 என்பி
லதனை வெயில்போலக்
காயுமே
யன்பி லதனை யறம்.
(இ-ள் )
என் பிலாத

உ யிரினைவெயில்
சுடுமாறு போலச்சுடும் ,
அன்பிலாத வுயிரினை
அறமும், (எ-று).
என்றது என்
சொன்னவாறோ
வெனின், என்:
[ ள்ளதனுக்கு
வெயில்குளிர் தீர்த்
தல் முதலான
இன்பத்தைப் பயக்கும்.
அவ்வாறன்றி

என்பில்லாததனுக்கு
வெயில் இறந்துபாட
டெல்லையான
துன்பத்தைப்
பயக்குமாதலால் ஒரு
தன்மையாக எறித்த
வெயில் உடம்பு
வேற்றுமையால்
இன்பமும் துன்பமும்
பயந்தவாறு போல்
அறமாகிய கடவுளும்
பிறர் மாட்டு அன்பு

செய்தார்க்கு இன்பமும் அன்பிலாதார்க்குத் துன்பமும் பயக்கும் என்றவாறாயிற்று. இதனானே அன்பு வேண்டுமென்றாராம்.

1

72. அன்பகத்
தில்லா வுயிர்வாழ்க்கை
வன்பாற்கண்
வற்றன் மரந்தளிர்த்
தற்று.

(இ-ள்)

தன்னிடத்து
அன்பில்லாத
வுயிரினது வாழ்க்கை, வ
லிய பாரிடத்து
உண்டாகிய உலர்ந்த
மரம் தளிர்த்தாற்போ
லும், (எ-று).

தளிர்த்தற்குக்
காரணமின்மையால்
தளிராதென்றவா

ாருயிற்று இஃது அன்

பிலாதார்க்கு ஆக்க

மில்லை என்றது.

73. புறத்துறுப்

பெல்லா

மெவன்செய்யும்

யாக்கை யகத்துறுப்

பன்பில் லவர்க்கு[1].

(இ-ள்)

உடம்பின்

அகத்துறுப்பாகிய

அன்பிலாதார்க்குப்
புறத்துறுப்புக்களெல்ல
ாம் யாதனைச் செய்யும்?
(ஏ-று). 3

---

'அன்பில்லவர்க்கு'
என்பது மணக்குடவர்
பாடல்.

RangaRakes

tamilnavarasam.com 26

# 4. அன்புடைமை

## 74. அன்பீன்

வழிய துயிர் நிலை
யஃதிலார்க் கென்புதோல்
போர்த்த வுடம்பு.

(இ-ள்)

உயிர்க்கு நிலைபேறு
அன்பின்
வழியதாகிய
அறத்தினான் வரும்;
ஆதலால், அவ்
வன்பிலாதார்க்கு
உளதாவது

என்பின்மேற் றோலினாற்
போர்க்கப்பட்ட
வுடம்பு, (எ-று).

இது வீடு
பெறுரென்றது;
இத்துணையும்
அன்பின்மையாலாகுங்
குற்றம் கூறிற்று.

75. அன்பிலா
ரெல்லாந் தமக்குரிய ரன்
புடையார

ரெண்பு ரியர்
பிறர்க்கு.

(இ-ள்)

அ ன்பிலா த ார்
எல்லாப் பொருளை யுந்
தமக்கே உரிமையாக
வுை டய ர்;
அன்புடைய ார்
ெ ப ாருளை ய ன்றித்
த ம்முடம்பிற்
கங்க ம ாகிய
வெ லு ம்பினை யு ம்

பிறர்க்கு உரிமையாக
வுடையர், (எ-று).

அன்புடையரர்க்கல்லது
அறஞ்செய்து
லரிதென்றது. 5

76. அன்போ
டியைந்த வழக்கென்ப
வாருயிர்க்
கென்போ டியைந்த
தொடர்பு.

(இ-ள்)

முற்பிறப்பின்கண்

அன்போடு பொருந்திச்

சென்ற செலவென்று

சொல்லுவர்;

பெறுதற்கரிய

வுயிர்க்கு இப்

பிறப்பின்கண் உடம்

போடு இடைவிடாத ந

ட்பு, (எ-று)

என்பு-ஆகுபெயர்,

இது நெடிது!
வாழ்வாரென் றது.
6

77. அன்புற்
றமர்ந்த வழக்கென்ப
வையகத்
தின்புற்றா
ரெய்துஞ் சிறப்பு.

(இ-ள்)
முற்பிறப்பின்கண்
பிறர்மேலன்பு வைத்துச்

சென்று செலவென்று
சொல்லுவர்,
இப்பிறப்பின்கண்
உலகத்தில் இன்ப
முற்றோர் அதன்
மேலுஞ்
சிறப்பெய்துதல்,
இது, போகந்
துய்ப்பரென்றது.

RangaRakes

(எ-று).

## 4. அன்புடைமை

78. அஃபிறு மார்வ
முடைமை யதுவீனு
நண்பெனு
நாடாச் சிறப்பு.

(இ-ள்) அன்பு
தரும், முடைமை தரும்,
நட்பென்று சிறப்பினை,

(எ-று).

என்றது

:அன்பினேனே

நாயகனோடு

வேறுபாடில்லாத

ஆர்வமுடைமையை;

அவ்வார்வ

சொல்லப்பட்ட

ஆராய்தலில்லாத

பத்தியுண்டாம்.

அ நனி முத்தியுண்

டாமென்றவாருயிற்று.

நாயகனோடு நட்டலின்

நட்பெனப்பட்டது.

ஆராயவேண்டாமையின்

உலகத்து நட்பல்ல

வாயிற்று.

இத்துணையும்

அன்பிறைவுள்ள

தாகும் அறப்பயன் கூற

ப்பட்டது.

79. அ

றத்திற்கே யன்புசார்

பெண்ப வறியார்
மறத்திற்கு மஃதே துணை.
(இ-ள்)
அன்பானது
அறஞ்செய்வார்க்கே
சார்பாமென்பர்
அறியாதார்; அவ்வன்பு
மறஞ் செய்வார்க்குந்
துணையாம், (எ-று).
மறம்
செய்யுங்கால்

சுற்றத்தார் மாட்டு
அன்புடையார்க்
கல்லது பெற்றி
கோடலின்றுமாதலான்
மறம் செய்வார்க்கும்
அன்பு
வேண்டுமென்றது.
மறஞ்செய்தல் பொரு
ள் காரணமாகலின்
பொருட்கும் அன்பு
வேண்டும்

என் றவருயிற்று. என்னை?
'அன்பிலன்
ஆன்ற துணை
யிலன் தான்துவ்வான்
என்பரியும் ஏதிலான்
துப்பு'
(867) என்றாராகலின்.
9
80. அன்பிற்கு
முண்டோ வடைக்குந்தா
ழார்வலர்

புன்கண்ணீர்[1] பூச

றலும்.

1

(இ-ள்)

அன்பினையும்

அடைக்குந்தாழுளதோ ?

அன்புடை

யார்பாட்டு உளதாகிய

புல்லிய கண்ணின்

நீர்தானே ஆரவாரத்

தினைத் தரும், (எ-று)

அன்பெனப்படுவதியாதென்று

ர்க்கு அன்புடையார்
மாட்டுக்
கண்ணீர் தோற்றும்,
அதனனே அறிந்து
கொள்க என்றவாறு.
இதனனே
இன்பத்துக்கும்
அமைந்தவாறு
கூறினரென்று கொள்ளப்
படும்.

---

1புன் கண்ணீர் என்பது
மணக்குடவர் பாடம்.

தாக்கவேண்டுவார்
எல்லாரையும் கூட்டுவி
ருந்து ஒன்றனையும் கூ
றியது எற்றுக்கெனின்,
ஆண்டுக்
கூறியதெல்லாம்
திரப்பிடு
மையாவர்க்குச்
செய்தலரிதாயினும்
உண்ணுங்காலத்து வந்த
விருந்தினர்க்குப்

பகுத்துண்டல்
அவர்க்கும் வேண்
டுதலின் இது சிறப்பு
விதியாகக்
கூறப்பட்டது.
அன்புடையார்
மாட்டல்லது வீ நந்தினர்
செல்லாமையின்
அதன்பிற் கூறப்பட்டது
.

இருந்தோம்பி யில்வா
ழ்வ தெல்லாம்
விருந்தோம்பி வேளா
ண்மை செய்தற் பொ
ருட்டு.

(இள் -)

இல்லின்கண் இருந்து
பொருளைப் போற்றி
வாழும்
வாழ்க்கையெல்லாம்,
வந்த விருந்தினரைப்

போ ற்றி அவர்க்கு உபகரித்ததற்காக , (எ-று).

எல்லாம் என்றது வாழ்க்கைப்பன்மை . இஃது இல்வாழ்க்கையின் பயன் விருந்தோம்பலென்றது . 1

82. விருந்து புறத்ததாத்

தாளுண்டல் சாவா

மருந்தெலினும்

(இ-ள்) விருந்தினர்

சாவாமைக்கு உண்ணும்

புடைத்தன்று, (எ-று.

சாவா மருந்தாவது

வேண்டற்பாற் றன்று.

இற்புறத்தாராகத்

தானே யுண்டல்,

மருந்தாயினும்

வேண்டும் பகுதி
தன்னாவிற்கு ங்
குறைந்து இதனை
இவ்வுயிர் கிடக்கும்;
இதனிற் குறையிற்
சாம்
என்னு மளவிற் ருகிய
சில்லுணவு. அதனை
உலகத்தார் உயிர்
போகாக் கஞ்சி என்பர்.
அ பிழ்த ம்

என்பர் பரிமேலழகர். இது

வாழ்ந்தார்க்கே யன்றி

வாழாதார்க்கும் விருந்தோம்ப

வேண்டும்

RangaRakes

என்றது,

2





## 5. விருந்தோம்பல்

83. வருவிருந்து
வைகலு மோம்புவான்
வாழ்க்கை
பருவந்து
பாழ்படுத லின்று.

(இ-ள்) நாடோ
றும் வந்த
விருந்தினரைப்
போற்றுவானது ஆக்கம்,
வருத்தமுற்றுக் கெ
டுவதில்லை, (எ-று)

விருந்தே
ரம்பவிருற் பயன்
என்னை என்ருர்க்கு
அதனுடைய பயன் கூறுவ
ரர் முற்படச் செல்வம்
கெடாதென்று கூறினார்.
3

84. அகனமர்ந்து
செய்யாள்
உறையு முகனமர்ந்து
நல்விருந் தோம்புவா
னில்,

(இ - ள்)
திருமகள் மனம்பொருந்தி உறையும்,
நல் விருந்தினரை
முகம்பொருந்திப்
போற்றுவானது
மனையின் கண் (எ-று)
இது, கேடின்மையேயன்றிச்
செல்வமுமுண்டா
மென்றது. 4

85. வித்துமிட
ல்வேண்டுங் கொல்லோ

விருந்தோம்பி

மிச்சில்

மிசைவான் புலம்.

(இ - ள்)

விருந்தினரை ஊட்டி

மிக்க வுணவை

யுண்ணுமவன் புலத்தின்க

ண், விதைதற்பொரு

ட்டு விதைக்கவும் வே

ண்டுமோ? தானே

விளையாதோ?

மேற்

செ சல் வமுஸ்டா
லெ மன்றூர்;
அஃதாமாறென்னே ?
ஈண்டிய பொருளே
வ மூங்குவாராயின்
என்றூர்க்குப் பொருள்
வருவாயாக இவன்
இயற்றுமிடம் நன்றாகப்
பயன்படுமென் று
கூறப்பட்டது. இவை மூ
ன்றும் இம்மைப்பயன்
கூறிற்று .
5

86. செல்விருந்
தோம்பி வருவிருந்து
பார்த்திருப்பா
னல்விருந்து வானத்
தவர்க்கு.

(இ-ள்) வந்த
விருந்தினரைப் போற்றி
வாராத விருந்தின
ரது வரவு
பார்த்திருக்குமவன்,
(எ-று).

RangaRakes

வானத்தவர்க்கு

## 5. விருந்தோம்பல்

வ ரவு

பா ர்த்தல்-விருந்தின்றி

யு ண்ணாமை .

நல்விருந்து-அவர் மனம்

மகி ழ்விப்பதோர்

விருந்து ,

அதனையு லகத்தார்

நல்விருந் தென்பர். இது சுவர்க்கம் புகுமென்று மறுமைப்பயன் கூறிற்று. 6

87. இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின் றுணைத்துணை வேள்விப் பயன்.

(இ-ள்) வி ருந்தினருக்கு

அளித்ததனல் வரும்
பயன் இன்ன
அளவினையுடைத்தென்று
சொல்லலாவது
ஒன்றில்லை;
அவ்விருந்தின
ரளவு யாதொரு
தன்மைத்து
அதனளவிற்றுப் பயனும்
(எ-று).

இவ்வளவோ

தானத்திற்குப் பயன்

என்றூர்குக் அற்றன்று;
வந்த விருந்தினர்

தன்மைக்கு அளவான

பயன் தரும் என்றது.
7

88.

பரிந்தோம்பிப் பற்றற்றே

மென்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார்.

(இ-ள்) விருந்தினரைப் போற்றி யுபசரிக்க

மாட்டாதார்,
வருந்தி யுடம்
பொன்றையும் ஓம்பிப் (
எ-று).
இது
விருந்தோம்பாதார்க்குக்
கூறப்பட்டது,

பொருளற்றேமென்றிரப்பர்,
குற்றமென்னே என்றூர்க்குக்

89. உடைமையு
ளின்மை விருந்தோம்ப
லோம்பா மடமை
மடவார்க ணுண்டு.

(இ-ள்)

உடைமையின் கண்ணே
யில்லாமைபோல, விருந்
தினர்க்கு அளித்தலைப் போற்றுத பேதைமை, பேதையார்மாட்டே யுளதாம், (எ-று)

மேற்கூறிய தீமை பயக்குமாதலின் இதனைச் செய்யாதார் அறியாரென்றவாறு.


90. மோப்பக்

குழையு மனிச்ச
முகந்திரிந்து நோக்கக்
குழையும் விருந்து.



31

5. விருந்தோம்பல்

(இ-ள்) எல்லா மலரினும் மெல்லிதாகிய அனிச்சப்பூ மோந்தா லல்லது வாடாது;

கேட்டார்க்கு மனமகிழுஞ் சொற்களைச் சொல்லுதல். இது புதியராய் வந்தார்க்கு ஒருதலையாக வேண்டுதலின் விருந்தோம்பலின்பின் கூறப்பட்டது.

92. அகனமர்ந் தீதலி னன்றே முகனமர்ந் தின்சொல னாகப் பெறின்.

(இ-ள்) மனம்

பொருந்திக்
கொடுத்தலினும் நன்று
. முகம் பொருந்தி
இனிமை சொல்ல
வல்லவனாயின், (எ-று).
இது இன்சொற்
கூற வேண்டும்
என்றது.
1

92. முகத்தா
னமர்ந்தினிது நோக்கி
யகத்தானா மின்சொலி

ணஃதே[1] யறம்.

(இ-ள்)

கண்ணுறலே பொருந்தி
இனிதாக நோக்கி
மனத்தோடே
இனிதாகச் சொல்ல
வல்லவனாயின், அது
தானே யறமாம், (எ-று)

---

1 'வினதே' என்பது
மணக்குடவர்

ம சொல்லுங்கால்
மனத்தொடு
கூறுதலும்,
நல்லவை ஆராய்ந்து
கூறுதலும், தாழ்ந்து
கூறுதலும், சிறுமை
பயவாதன
கூறுதலும், .
ரு ருனையெல்லார்
மாட்டும் கூறுதலும்,
குணத்தொடு
கூறுதலும் வேண்டு

மாதவின்
இவையெல்லாம்
கூறுவார் முற்பட
மனத்தொடு கூற
வேண்டுமென்பதூஉம்,
அதுதானே யறமாம்
என்பதூஉங் கூறினார்.

.
൭

௯௩.

அல்லவை தேய
வறம்பெருகு

நல்லவை நாடி யினிய

சொலின்.

(இ-ள்)

நல்லவான சொற்களை

யாராய்ந்து

இனியவாகச்

சொல்லுவானாயின்,

அதனானே

அறமல்லாதன தேய

அறம் வளரும்

(எ-று).

இது நல்லவை ஆராய்ந்து கூறவேண்டும் என்பதூஉம் அதனாற் பயனும் கூறிற்று.

94.

பணிவுடைய
னின்சொல னாத
லொருவற் கணியல்ல
மற்றுப் பிற.

(இ-ள்)

ஒருவனுக்கு அழகாவது
தாழ்ச்சி யுடையனு
மினிய
சொற்களைக் கூற
வல்லனாதல்: பிறவ
ாகிய அழகெல்லாம் அ

வின்சொன் மறுமையு
மிம்மையு மின்பந்
தரும்.

(இ-ள்) புன்மையுள் நின்று நீங்கிய இனிய சொற்கள், இம்மையின்கண்ணும் மறுமையின்கண்ணும் இன்பந்தரும், (எ-று).

அஃதாவது மக்களாயும் தேவராயும் நுகரும் இன்பம். இது சிறுமை பயவாதன கூறவேண்டுமென்பதூஉம் அதனாற் பயனும் கூறிற்று.

## 6. இனியவை கூறல்

௰.

துன்புறூஉந்
துவ்வாமை
யில்லாகும் யார்மாட்டு
மின்புறூஉ மின்சொல்
லவர்க்கு.

(இ-ள்)

துன்பமுறுகின்ற நுகராமையாகிய நல்குரவு இல்லையாகும்; யாவர்மாட்டுங் கூறு மின்பமுறுகின்ற இனிய சொல்லை யுடையார்க்கு (எ-று).

இஃது எல்லார் மாட்டும் இன்சொற் கூறவேண்டும் என்பது

ராஉம். இதனானே
யொருளுண்டாம்
என்பதூஉம் கூறிற்று.
6

97. நயனீன்று
நன்றி பயக்கும்
பயனீன்று
பண்பிற் றலைப்பிரியாச்
சொல்.
(இ -ள் )
பிறரான்

விரும்பப்படுதலையும் பயந்து, பொருளையும் பயந்து, அறத்தினையும் பயக்கும்; குணத்தினின்று நீங்காத சொல், எ-று).
நயனின்று பயனின்று நன்றிபயக்கும் எனக் கூட்டுக. இது குணத்தொடு கூறல்

வேண்டும் என்பதூஉம்
அதனானே அறம்
பொருள் இன்பம்
மூன்றும் எய்தலாம்
என்பதூஉங் கூறிற்று .
7

98. இன்சொலா
லீர மளைஇப்
படிறிலவாஞ்
செ ம்பொருள்
கண்டார்வாய்ச் சொல்.

(இ-ள்) இருவர் மாறுபடச் சொன்ன மாற்றத்தினது உண்மைப் பொருளைக் கண்டார் கூறும் மெய்யாகிய சொற்களும் இன்சொலாதலானே அருளொடு கலந்து குற்றமிலவாம். (எ-று)

எனவே

அவ்வாறு கூருராயிற் குற்றம்போலத் தோற்றும் என்பது கருத்து. என்னை? நடுவு செய்வான் ஒருவன் ஒருவனைத் தோல்வி சொல்லுங்காலத்து இன்சொல்லாலே கூருணையின் அது குற்றமாய்த் தோற்றுமாதலான்.

இஃது ஒருவனைக் கடிந்து சொல்ல வேண்டு மிடத்தும் இன் சொலாலே கடிய வே ண்டுமென்றது .
8

99. இன்சொ லினிதீன்றல் காண்பா வன்சொல் வழங்கு வது.

RangaRakes

னெவன்கொலோ

# 6. இனியவைகூறல்.

(இ-ள்) பிறர்க்கு இனிதாகச் சொல்லுஞ் சொற்கள் இன்பத் தைத் தருதல் கண்டவன் கடிய சொற்களைக் கூறுதல் யாதனைக் கருதியோ (எ-று).

இஃதினிமை

கூறுதார்க்கு ஒரு

பயனுமில்லை என்றது

9

100. இனிய

வுளவாக வின்றுத

கூறல்
கனியிருப்பக்
காய்கவர்ந் தற்று.

(இ-ள்) கேட்டார்க்கினியவாஞ் சொற்களைக்கூறலாய் இருக்க இன்னாத சொற்களைக் கூறுதல், பழமுங் காயும் ஓரிடத்தே கண்டவன் பழத்தைக் கொள்ளாது காயைக் கொண்ட தன்மைத்து, எ-று).

இது பிறர்க்கேயன் றித்

தனக்கும்

7.

## செய்ந்நன்றி

# நன்ருகாதென்றது. 10

# யறிதல்

செய்ந்நன்றி யறிதலாவது தனக்குப் பிறர் செய்த நன்மையை மறவாமை. இதனானே பிறர் செய்த தீமை மறக்க வேண்டும் என்றவாறு மாயிற்று. மேல் யாதானுமொன்றைச் சொல்லுங்கால் நல்லது சொல்ல வேண்டும் என்றார். இது நல்லது நினைக்க வேண்டும் என்றமையாற் பிற் கூறப்பட்டது,

## 101. மறவற்க

## மாசற்றார் கேண்மை

## துறவற்க

## து ன்பத்துட்

## டுப்பாயார் நட்பு.

(இ-ள்) தனக்குத் துன்பம் வந்தகாலத்து வலியாயினரது நட்பை மறவாதொழிக: குற்றமற்றாரது நட்பைத் துறவா தொழிக, (எ-று)

ஒருவனுக்கு எல்லாப் பொருளையும் மறத்தலும் துய்த்தலும் செய்ய நன்மை பயக்குமாயினும் மாசற்றாரது நட்பைத் துறவாமை யிருமைக்கும் நன்மைபயக்குமாறு போலத் துப்பாயார் நட்பைத்



# 35

7.

# செய்ந்நன்றியறிதல்

[illegible] இருமை
யின் கண்ணும் இன்பம்
பயத்தலின் அதனை
[illegible] றிதல் வே
ண்டும் என்றது.

102. நன்றி

மறப்பது நன்றன்று நன்றே மறப்பது நன்று.

(இ-ள்) பிறர் செய்த நன்றியை

1

நன்றல்ல

மறப்பது என்றும் நன்றல்ல, பிறர் செய்த தீமையை அன்றே மறப்பதன்றே நன்றாம்: (எ-று)

இது தீமை

மறக்கவேண்டு
மென்று கூறிற்று.
2

103. செய்யாம
ற்¹ செய்த வுதவிக்கு
வையகமும் வானகமு
மாற்ற லரிது.
(இ-ள்)
முன்னொருதவியைச்
செய்யாதாருக்கு
ஒருவன் செய்த
வுதவிக்கு உலகமும்

சுவர்க்கமும் நிறைய

ாற்றுத லரிது. (எ-று).

பிறர் செய்த

நன்மைகளிற்

செய்யாமைச்

செய்தலும், பயன்

தூக்காது செய்தலும்,

காலம் தப்பாமற்

செய்தலும்

வலியுடைத்து. அவற்

றுள் செய்யாமைச் செ

சய்த வுதவி நிலத்திை

ட பெரிதென்றது 3

104.

பயன்றூக்கார்[2]
செய்த வுதவி
நயன்றூக்கி னன்மை
கடலிற் பெரிது.

(இ - ள்)
தமக்கொரு பயனை
நோக்காதவனு ய்ச்
செய்த வுப காரத்தை
நயனுடைய வன்
றூக்குவ ருறையின்

வென்றி

விளையுரைப்பான்

பண்பு.

(இ-ள்) பல நூல்களையும் கற்றார்முன்னர் அந்நூல்களைத் தானுஞ் சொல்ல வல்லவனாதல், வேலுடையார் முன்னின்று தன்

னரசனுக்கு வெற்றியாகிய வினையைச் சொல்லுமவனது இயல்பு, (எ-று)

684. அறிவுரு
வாராய்ந்த கல்வியிம்
மூன்றின்
செறிவுடையான்
செல்க வினைக்கு

(இ-ள்)
அறிவும், வடிவும்,
தெளிந்த கல்வியும் இம்
மூன்றினது
அடக்கமுடையவன்

வினைக்குச் செல்லுக.

(எ-று).

அறிவு-இயற்கையறிவு. உருவு-வடிவழகு. ஆராய்ந்த-கலைகளை அறிந்து ஆராய்ந்ததனால் ஆட்சியான கல்வி. இவையிற்றினது அடக்கமாவது இம்மூன்றினால் வரும் பெருமிதத்தை அடக்கி ஒழுகுதல். 4

685. அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பாற்
கின்றி யமையாத மூன்று.

(இ-ள்)
அன்புடைமையும்

அறிவுடைமையும்,

தெரிந்த சொல்
வன்மை யுடைமையும்
என்னும் மூன்றும்
யமையாதனவாம்,

(எ-று).
RangaRakes

தூதுரைப்பார்க்கு இன்றி





6. தூது

ஆராய்ந்த

என்றமையால் கல்வி அயிற்று. மேற் கூறிய குணங்கள்

எல்லாவற்றினும் இவை
மூன்றும்
இன்றியமையாதன என்று
கூறிற்று.
இத்துணையும்
தூதரிலக்கணம் கூறிற்று.
5

686.

விடுமாற்றம் வேந்தர்க்
குரைப்பான் விடுமாற்றம்
வாய்சோரா வன்க
ணவன்.

(இ-ள் )
தன்ன ரசன்
செ சால்லிவிட்ட
மாற்றத்தைப் பகையர
சர்க்குச் சொல்லுமவன்,
தன்னரசன் சொல்லும்
சொற்களுக்கு வடு வான
சொற்களை மறந்துஞ்
சொல்லா த
அஞ்சாமையை யுடை
யவன்; (எ-று).
இது முதலாகச்

செ ா ல்லும் திறன்
கூறுகின்ற தாகலின்
முற் படச் சொல் சொல்ல
வேண்டும் என்றது.
6
687. இறுதி
பயப்பினு மெஞ்சா
திறைவற்
குறுதி பயப்பதாந் தூது.
(இ -ள்)
தன் உயிர்க்கு இறுதி
பயக்குமாயினும்,

சொல்லு தலை ஒழியாதே,
சொல்லுதலி ன் , தன்
அ ரசனுக்கு
உறுதியுண் ட ாம்
சொற்களை கூறுமவன்
தூதனாவான், (எ-று).

இஃது இறுதி பயப்பினும்
என்றஞ்சயான் அரசன்
சொன்ன
மாற்றத்தையே சொ
ல்லுக என்றது.

தன்னரசனுக்கு நன்மையைத் தருமவன் தூதனாவான், (எ-று).

இது சொல்லுமாறு கூறிற்று.

8

689. கற்றுக்கண்ணஞ்சான் றக்க தறிவதாந் தூது.

RangaRakes

செலச்சொல்லிக்

அது மாற்றுதற்காம் உபாயத்தைக் கற்று, அவ்விடத்து அஞ்சுதலின்றி, வெகுட்சி தீருமாறு இசையச் சொல்லி, நாணோடே கூடச்செய்யத் தகுவன அறிந்து செய்ய வல்லவன் தூதனாவான், (எ-று).

தக்கதறிதலாவது
சொல்லின
வார்த்தை தனையச்
சொல்லாமற்
போதலும், வினை
செய்து போதலும்.
இஃது
இவ்விடத்திற்கு
ஆவனசெய்யவேண்டும்
என்றது.
9
690.

கடனறிந்து காலங்
கருதி யிடனறிந்
தெண்ணி யுரைப்பான்
றலை.
(இ-ள்)
காரியம் நின்ற
முறைமையை யறிந்து
காலத்தையும் நினை
த்து, இடமும்
அறிந்து,
தானெண்ணிச்
சொல்ல வல்லவன்

தலையா னா
தூதனாவான், (எ-று).
தலை இடை
கடை என மூன்று
வகையாருள்
மேற்கூறினவெல்லாம்
இடையும் கடையும்
ஆகிய தூதர் இயல்பு
கூறினார்.
இது தலையான
தூதரிலக்கணம்
கூறிற்று, தலையான

தூதன்;தானே காரியம் அறிந்து சொல்லும்; இடையான தூதன் சொன்ன மாற்றத்தைச் சொல்லும்; கடையான தூதன் ஓலை காட்டும். 10

RangaRakes

# 7.

# மன்னரைச்சேர்ந்தொழுகல்

மன்னரைச் சேர்ந்தொழுகலாவது அரசர்மாட்டு அமாத்தியர் ஒழுகுந்திறன் கூறுதல். இது முதலாக அவையஞ்சாமை

ஈறாகக் கூறுகின்றவை
த ம் மரசர்மா ட்டு
வேண் டுமாயினு ம் ,
மாற்றரசர் மாட்டும்
வே ண் டுதல்
இன்றியாமை மயாத
சிறப்புடைத்தாதலின் ,
அதன்பின் இது
கூறப்பட்டது.

691.

குறிப்பறிந்து காலங்
கருதி வெறுப்பில

வேண்டுப வேட்பச்
சொலல்.

(இ-ள்) அரசன்
குறிப்பை யறிந்து ,
காலம் பார்த்து,
வெறுப்
பில்லாதனவாய்ச் செ
ால்ல
வேண்டுவன வற்றை
விரும்புமாறு
சொல்லுக, (எ-று).

இது .

சொல்லுந் திறன் கூறிற்று .

1

692. வேட்பன சொல்லி வினையில வெஞ்ஞான்றுங் கேட்பினுஞ் சொல்லா விடல்.

( இ -ள்) வேந்தனால் விரு ம்பப்படுவனவற்றைச்

சொல்லித் தமக்குப் பய
ன் படாதனவற்றைக்
கேட்டாலும்
சொல்லாது விடுக,
(எ-று).

சொல்லாது
விடலாவது தூதனை
நுமக்குப் படை
எவ்வளவு உண்டென்று
பகையரசன்
வினாவினால், நீ
அறியாத தொன்றோ

வென்று அளவு

கூறாமை.

வி னையில

என்றமையால் பயன்

உண்டாயின்

சொல்லுக என்பது

கருத்து. தன் அரசன்

பெண்டிர்

முதலாயினாரைக்

கேட்டார்க்குச்

சொல்லாமை. இவை

போல்வன

சொல்லாமை

வேண்டும் என்றது.

693.

செவிச்சொல்லுஞ் சேர்ந்த

வான்ற பெரியா

ரகத்து.

RangaRakes

2

நகையு மவித்தொழுக

tamilnavarasam.com

7. மன்னரைச் சேர்ந்தொழுகல்

(இ-ள்) ஒருவன் செவியுட் சொல்லுதலும், ஒருவன் முகம் சேர்த்துத் தம்மில் நகுதலும், தவிர்ந்தொழுக அமைந்த பெரியாரிடத்து (எ-று).

இது, செவிக்

கூற்றும் நகையும்
ஆகாவென்றது.
3

694.

எப்பொருளு மோரார்
தொடரார்மற்
றப்பொருளை
விட்டக்கால் கேட்க
மறை.

(இ-ள்)

யாதொரு பொருளையு
ம் செவிகொடுத்து

ஓராது. தொடர்ந்து கேளாது, அப்பொருளை மறைத்தல் தவிர்ந்தால் பின்பு கேட்க, (எ-று).

இது, கேட்டல் விருப்பமும் குற்றமென்றது. 4

695. மன்னர் விழைப விழையாமை மன்னரான் மன்னிய வாக்கந் தரும்.

(இ -ள்)
எல்லார்க்கும் பொதுவ
ாகக் கருதினவையன்
றி, மன்னரால் விரு
ம்ப ப்ப ட்டவையிற்றை
விரும்பாதொழிக;
அவ் விரும்பாமை, அ
ம் மன்னன்தானே
நிலையு ள்ள
செல்வத்தைத் தருமா
தலான், (எ-று).
அவை நுகர்வனவும்

ஒப்பனை

முதலாயினவுமாம் .

இஃது,

அவற்றைத் தவிர்தல் வேண்டுமென்றது .

5

696. போற்றி

னரியவை போற்றல்

கடுத்தபின்

றேற்றுதல் யார்க்கு

மரிது.

(இ -ள்)

காப்பாளாயின் .

காத்தற்கு

அ ரியனவற்றைக்

காக்க; குற்ற மூணை ெ

டன்று ஐயப்பட்ட

பின்பு தெளிவித்தல்

யாவர்க்கும் அரிது. (எ-

று)

இ ஃது ,

அடுத் தொன்று

சொல்லாமலொழுக

வேண்டுமென்றது. அது

# சேர்ந்தொழுகுதல்

(இ-ள்)
தீக்காய்வாரைப் போல
நீங்குதலும் செய்யாது,
குறு குதலும் செய்யாது
மாறுபாடு இல்லாத*
வேந்தரைச்
சேர்ந்தொழுக
அமாத்தியர், (எ-று).

இது,
சார்ந்தொழுகுந் திறன்

கூறிற்று. இத்துணையும்
பெரும் பான்மையும்
மாற்றரசரை நோக்கிற்று
.
7
69 8 .
கொ ளப் பட்டே
மென் றெ ண்ணிக்
கொள் ளாதசெ ய்யார்
துளக்கற்ற காட்சி யவர்.

(இ-ள்) யாம்
அரசனாலே

கைக்கொள்ளப்பட்டே

மென்று
நினைத்து, அவன் நெஞ்சிற் கொள்ளாதன செய்யார், அசைவற்ற தெளிவுடையார், (எ-று)

இஃது, அரசன்

இசைவன செய்ய

வேண்டுமென்றது.

8

699. பழைய

மெனக்கருதிப் பண்பல்ல

செய்யுங் கெழுதகைமை

கேடு தரும்.

(இ-ள்) யாம்
பழைய மென்றுகருதி,
இயல்பல்லாதன
வற்றைச் செய்யும்
நட்பின் தகைமை,
தனக்குக்
கேட்டைத்தரும், (எ-று).
இது,
இயற்கையல்லாதன
தவிரல்
வேண்டுமென்றது.
9

700. இளைய
ரினமுறைய ரென்றிகழார்
வொளியோ டொழுகப்
படும்.

(இ-ள்) இவர்
நமக்கு இளையரென்றும்
முறையரென்றும்
இகழாது, அவர்
பெற்றுநின்ற பொருந்த
ஒழுகவேண்டும். (எ-று).

நின்ற

இத்தன்மையாகிய தலைமையோடே

முறையர் என்றது இளங்கிழமை முறை. இது காலத்துக்குத் தக்க காட்சி செய்யவே ண்டுமென்றது. இவை மூன்றும் பெரும் பான்மையும் தன் அரசனை நோக்கிற்றின. 10

---

* 'உடைய' என்பது

RangaRakes

மணக்குடவர் பாடம்





# 8.

# குறிப்பறிதல்

குறிப்ப றிதலாவது அரசர் உள்ளக் கருத்தை

அமைச்சர் அறி தலு ம்
அமைச்சர் உள்ளக்
கருத்தை அரசர்
அறிதலும் இஃது
அ மை மச்சரியலாதலின்
அமைச்சர் குறிப்பறிதல்
கூறியதென்னை யெனின்,
குறிப்பறிதல் அரசர்க்கு
வேண்டுமாதலின் ,
இறந்தது காத்தலென்னுந்
தந்தி ரயுத்தியாற்
கூறப்பட்டதென்க, இது
பெரும் பாண்மையும்

அப சர்க்கும்
வேண்டுதலின் ,
மன்னரைச் சேர்ந்
தொ ழுகலி ன் பின்
கூறப்பட்டது.

701. முகத்தின்
முதுக்குறைந்த துண்டோ
வுவப்பினுங்
காயினுந் தான்முந்
துறும்.
(இ-ள்) முகம்போல
முதிர்ந்த அறிவுடையது

பிறிதுண்டோ?
ஒருவனை உவப்பினும்
(எ-று).

குறிப்பறியுமாறு
விக்குமென்றது.

702. அடுத்தது

வெறுப்பினும் தான்
முற்படக் காட்டும்,
என்னை யென்றார்க்கு,
இது முகம் அறி

காட்டும் பளிங்குபோ
னெஞ்சங்
கடுத்தது காட்டு முகம்.

(இ-ள்)
தன்னையடுத்த
வண்ணத்தைக்
காட்டுகின்ற
பளிங்கைப்போல
நெஞ்சத்து மிக்கதனை
முகம் காட்டும், (எ-று)
மேல்முகமறிவிக்கு
மென்றார்;
அஃதறிவிக்குமாறென்னை

என்றார்க்கு (மூகம்) வெகுட்சி யுண்டாயின் கருகியும் மகிழ்ச்சி யுண்டாயின் மலர்ந்தும் காட்டுமென்றது.

2

703. நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங்காற் கண்ணல்ல தில்லை பிற.

(இ-ள்) யாம்

நுண்ணிய அறிவுை
டயமென்பார் பிறரை
அளக்குங் கோலிபது
விசாரிக்குமிடத்துக்
கண்ணல்லது பிற
இல்லை.
ஆதலான்
கண்கொண்டறிந்து

RangaRakes

கொள்க, (எ-று)

## 8. குறிப்பறிதல்

நுண்ணியார் முகத்தின்

தோற்றம் விடார்;

அவரைக் கண்டு

அறிய வேண்டும் எ

ன்றது.

3

704.

பகைமையுங்கேண்

மையுங் கண்

ணுரைக்குங்கண்ணின்

வகைமை யுணர்வார்ப்
பெறின்.

(இ-ள்)

ஒருவனோடுள்ள
பகைமையும்
நட்பையும் கண்கள்
சொல்லும்;
கண்ணினது
வேறுபாட்டை
யறிவாரைப் பெறின்,
(எ-று)

இது, கண் கண்டு
குறிப்பறிதல்
நுண்ணியார்க்
கல்லது
அரிதென்றது.
4 705. குறிப்பிற்
குறிப்புணரா வாயி
னுறுப்பினு ளென்ன
பயத்தவோ கண்.
(இ-ள்)
ஒருவன் முகக்

குறிப்பினானே

அவனவன் மனக்

குறிப்பை யறிய

மாட்டாவாயின்,

தன்னுறுப்புக்களுள்

கண்கள்

மற்றென்ன பயனைத்

தருமோ? (எ-று).

இது.

குறிப்பறியாதார்

குருடரோடு

ஒப்பரென்றது.
5

706. குறித்

தது கூறாமைக்

கொள்வாரேர டேனை

யுறுப்போ ரனையரால்

வேறு.

(இ-ள்)

நினைந்ததனைச்

சொல்லாமைக்

கொள்ளவல்லாரோடு

மற்றையார் உறுப்பு
ஒரு தன்மையர்
அல்லது
அறிவினால் வேற்றுமை
யுடையர், (எ-று).

இது,
குறிப்பறியாதார்
அறிவில்லாதார்
என்றது. 6

707.

கூறாமை நோக்கிக்
குறிப்பறிவா
னெஞ்ஞான்று
மாறாநீர்
வையக் கணி.
(இ-ள்)
அரசன்
மனநிகழ்ச்சியை அவன்
கூறுவதன்முன்னே
நோக்கி அறியுமவன்,
எல்லாநாளும் மாறாநீர்

சூழ்ந்த வையத்துக்கு
அணிகலனாவான்,
(எ-று).
இது மக்களிற்
சிறப்புடையனா
மென்றது.

 

## 8. குறிப்பறிதல்

708. ஐயப்
படாஅது அகத்தது

துணர்வாரைத்

தெய்வத்தோ டொப்பக்

கொளல்.

(இ-ள்) பிறர்

நிை னத்தத னை

ஐய ப்படுதலின்றித்

துணிந்து

அ றியவல்லாரைத்

தேவரோடு ஒப்பக்

கொள்க, (எ-று).

அ வரும்

பிறர் நினைவு அறிவர்;
இவரும் அவ்வாறு
அறி

தலான் இவரைத்
தேவராக
மதிக்கப்படும்
என்றது. இவை
யிரண்டும்
குறிப்பறிந்தார்க்கு
உளதாகும் நன்மை
கூறின. 8

709.

முகநோக்கி நிற்க வமையு மகநோக்கி யுற்ற துணர்வார்ப் பெறின்.

(இ -ள்)

முகத்தை நோக்கி நிற்க, அமையும்; தன் மனத்தை நோ க்கி அ றி லு ற்றத ணை அ றியவல்லாரைப் பெறின், (எ-று)

எனவே .

அமாத்தியர் குறிப்பை
அ ரசரும்
அறியவேண் டு
மென் றவா றாயிற்று ;
நிற்கின்ற தொழில்
அமாத்தியன் கண்ணா
தாகலான் .
9

710. குறிப்பிற்
குறிப்புணர் வா ரை
யுறுப்பினுள்

யாதுங் கொடுத்துக் கொளல்.

(இ-ள்) முகக் குறிப்பினாலே உள்ளக்கருத்தை அறியுமவர்களைத் தன் உறுப்பினுள் வேண்டுவது யாதொன்றாயினும் கொடுத்துத் துணையாகக் கூட்டிக் கொள்க, (எ-று).

ஐயமுற்றார்க்குக் கூறப்பட்டது.



இவையிரண்டும் அரசன் மேலன 10

---



9.

அவை யறிதலாவது ஏற்கச் சொல்லுதல். அரசன்

217

அவையறிதல்

இருந்த
அவையத்தாரையறிந்து
அதற்கு
குறிப்பறிந்தாலும்
அவையறிந்து சொல்ல
வேண்டு மாதலின்,
அதன்பின்
கூறப்பட்டது.

711.

அவையறிந் தாராய்ந்து
சொல்லுக சொல்லின்

றொகையறிந்த தூய்மை யவர்.

(இ-ள்) இருந்த அவையத்தாரை யறிந்து, அதற்குத் தக்க சொல்லும் திறனை ஆராய்ந்து சொல்லுக; சொல்லின் தொகையை யறிந்த தூய்மையை யுடையர், (எ-று).

தொகையறிதல்-திறனறிதல்.

இது. அவையறிந்து ஆராய்ந்து சொல்லுமாறு கூறிற்று.
I

712 ஆற்றி

னிலைதளர்ந் தற்றே வியன்புல

மேற்றுணர்வார் முன்ன ரிழுக்கு.

(இ-ள்) ஒரு நெறியின்கண் நின்றார்

அந்நிலைமை குலைந்
தாற்போல இகழப்படும்,
அகன்ற கல்வியைக்
கேட்டறிய வல்லார்
முன்னர்த் தப்புதல்,
(எ-று).

ஏற்று என்பது
கேள்வியின்கண்
வருதலின் கேள்வி
ஆயிற்று. மேல் தப்பு
வாராமற் செ

ால்லவேண்டுமென்றார்;
அதனால் வரும் குற்ற
மின்மை என்றார்க்கு
இது கூறபபட்டது.
உ

715. நன்றென்
றவற்றுள்ளு நன்றே
முதுவருண்
முந்து கிளவாச் செறிவு.

(இ ள்)
நன்றென்று சொல்லப்ப

ட்ட

நன்று, தம்மின்

முதிர்ந்தார்முன்

மூந்துற்றுச்

(எ-று)

RangaRakes

எல்லாவற்றுள்ளும் மிக
சொல்லாத அடக்கம்,



218

9. அவையறிதல்

முதுவர்-தவத்தானும்
குலத்தானும்
முதிர்ந்தார். இஃது,
இருந்த அவை
யின்கண் முந்துற்றுச்
சொல்லல் ஆகா
தென்றது. இவை
மூன்றும் ஆராய்ந்து
சொல்லுமாறு கூறின.
3

கற்றறிந்தார் கல்வி
விளங்குங் கசடறச்
சொற்றெரிய வல்லா
ரகத்து.

(இ-ள்)

நூல்களைக்கற்று ,
அதன்பயனு ம்
அறிந்தவர்களது கல்வி
விளங்காநிற்கும்;
குற்றமறச் சொ ல்லை
ஆராயவல்லா ர்

முன்னர்ச் சொல்லின்,
(எ-று).

இது,
கல்வியின் விழுப்பம் கற்றோர்க்கல்லது அறிதலரிது; ஆதலான் அவர்முன்பு சொல்லுக. அதனானே அக்கல்வி விளங்கும் என்றது.
4

715. இடைதெரிந்து நன்குணர்ந்து

சொல்லுக சொல்லின்
நடைதெரிந்த
நன்மை யவர்.

(இ-ள்)
சொன்னால் அதற்கு
வருங்குற்றத்தை
ஆராய்ந்து,
நன்மையாமவற்றை
யறிந்து, சொல்லுக;
சொல்லினது வழக்
காராய்ந்த
நன்மையுடையார்,

(எ-று).

இஃது,
ஆராய்ந்து
சொல்லுமாறு
கூறிற்று.
5

716. உணர்வ
துடையார்முற்
சொல்லல் வளர்வதன்
பாத்தியு ணீர்சொரிந்
தற்று.

(இ-ள்)

யாதாலும் ஒன்றைச்
சொல்லுங்கால்,
அதனைத்
தெரிந்துணரும்
அறிவுடையார் முன்பு
சொல்லுக; அது
வளர்வ
தொன்று நின்ற
பாத்தியின்கண்ணே
நீர் (எ-று).

உணர்வது-அறிவது;
மேல் சொல்

சொல்லுக என்றார்;
அப்பொருள் அறிவார்
என்பதூஉம்,
அச்சொல்லிலாலே
தம் கல்வி கூறிற்று.



சொரிந்தாற்போலும்,

அறிவார் முன்னை
முன்னர்ச் சொல்லுக
வளரும் என்பதூஉம்

## 6. அவையறிதல்

717. புல்லவையுட்
பொச்சாந்துஞ்
சொல்லற்க நல்லவையு
ணன்கு செலச்சொல்லு
வார்.

(இ-ள்) புல்லியாரிருந்த
அவையின்கண் மறந்துஞ்
சொல்லா

தொழிக; நல்லாரிருந்த அவையின்கண் நல்லதனை இசையச் சொல்லவல்லார், (எ-று).

இது வெளியார் முன் வெள்ளையாயிருத்தலால் அவர் முன்பு சொல்லாதிருத்தல் என்றது. 7

718. அங்கணத்து
ளுக்க வமிழ்தற்றாற்
றங்கணத்த
ரல்லார்முற் கோட்டி
கொளல்.

(இ-ள்) அங்கணத்தின்
உக்க அமிழ்தம் போல
இகழப்படுவர்;
தம்முடைய
இனமல்லாதார் முன்
சொல்லுவாராயின்,

(எ-று).

கல்வியுடையார்
புல்லவையுள்
சொன்னால் உளதாகுங்
குற்ற
மென்னையென்றார்க்கு,
இஃது
இகழப்படுவரென்றது.
8
719. அவையறியார்
சொல்லன்மேற்

கொன்பவர் சொல்லின்
வகையறியார்
வல்லதூஉ மில்.

(இ-ள்) அவையினது அளவை அறியாது ஒன்றைச் சொல்லுதலை மேற்கொள்பவர், சொல்லின் வகையும் அறியார் ஆவர்; அன்றி வேறு வல்லதுவும் இலராவார், (எ-று).

வகை-சிலசொல். இது

பிறரான் மதிக்கப்படார்

என்றது. 9

720. ஒளியார்முன்

னொள்ளிய ராதல்

வெளியார்முன்

வான்சுதை

வண்ணங்கொளல்.

# அவையஞ்சாமை

அவையஞ்சாமையாவது அவையின்கண் அஞ்சாது சொல்லுதல்; அவை அறிந்தாலும் அஞ்சாது சொல்ல வேண்டுதலின், அதன்பின் கூறப்பட்டது.

721.

பகையகத்துச் சாவார

ரெளிய ரிய
ரவையகத் தஞ்சாதவர்.
(இ-ள்)
பகையின்கண் அஞ்சாது
நின்று சாவார்
பெறுதற்கு
எ யளிர் ;
அவையின் கண்
அஞ்சாது
சொல்லவ ல்லா்ர்
பெறுதற்கு அரியர்,
(எ-று).

இஃது ,
அவையஞ்சாமை
அறிதென்றது.
1

722.

கற்றார்முற் கற்ற
செலச்சொல்லித்
தாங்கற்ற
மிக்காருண் மிக்க
கொளல்.

(இ-ள்) தாம்
கற்றதனைக்

கற்றவர்கண்முன்பே
இசையச் சொல்லித் தாம்
கற்றதினும்
மிகக்கற்றார்மாட்டு
அவர் மிகுதியாகக் கற்ற
பொருளைக்
கேட்டுக்கொள்ளுதல்
அவையஞ்சா
மை:யாவது, (எ-று)
கேட்டல்
நாணாமையால்
வருதலின் அஞ்சாமை

ஆயிற்று. மேல்
அரிதென்று கூறிய
அவையஞ்சாமை
எத்தன்மைத் தென்
றார்க்கு
இத்தன்மைத்தென்று
கூறப்பட்டது.
2

723.

கற்றாருட் கற்றா
ரெனப்படுவர்
கற்றார்முற்

கற்ற செலச்சொல்லு
வார்.

(இ - ள்)

கற்றாரெல்லாரினும்
கற்றாரென்று
சொல்லப்படுவார்; தாம்
கற்றதனைக் கற்றா
ர்முன்பு அவர்க்கு
ஏற்கச் சொல்ல
வல்லார், (எ-று).

இது.
கற்றாரென்பதூஉம்

நல்லவையு

ளைங்கு செலச் சொல்லா

தார்.

(இ -ள்)

பலநூல்களைக்

கற்றாலும்

ஒருபயனுடையரல்லர்;

நல்லவையின் கண்

நன்றாக அவர்க்கு

ஏற்கச்

சொல்லமாட்டாதார்;

(எ-று).

இஃது

அவையஞ்சுவார்

கற்றகல்வி பிறர்க்குப்

பயன்படாதென்றது.

4

725.

வானொடென்

வன் கண்ணை

ரல்லார்க்கு

நூலொடென்

னுண்ணவை யஞ்சு

பவர்க்கு.

(இ-ள்) வாளினாற் பயனென்னை வன்கண்ணரல்லாதவர்க்கு அதுபோல நூலினாற் பயனென்னை நுண்ணியவவையின்கண் அஞ்சுபவர்க்கு (எ-று).

இது, பிறர்க்குப் பயன்படாமையன்றித் தமக்கும் பயன்படாதென்றது.

7 2 6 .

பகையகத்துப்
பேடிகை யொள்வா
ளவையகத்
தஞ்சு மவன்கற்ற நூல் .
(இ -ள்)
ப கையின்கண்
அஞ்சுமவன் பிடித்த
கூர்வாள் போலும், அ
வையின்கண் அ
ஞ்சுமவன் கற்ற நூலும்,

(எ-று).

மேல் பயனில்

லை யென்றார், இது

பயனில்லாதவா று

காட்டிற்று.

6

727. கல்லா

தவரிற் கடையென்ப

கற்றறிந்து நல்லா

ரவையஞ்சு வார்.

(இ-ள்)

கல்லாதவரினும்

கடையென்று
சொல்லுவார் உலக
த்தார்
கற்றறிந்துவைத்தும்,
நல்லாரிருந்த
அவையின்கண்
சொல்லு
தலஞ்சுவாரை,

(எ-று).
இது, கல்லாதவரினும்

RangaRakes

இகழப்படுவரென்றது.
7





10 அவையஞ்சாமை

728. உளரெனினு
மில்லாரோ டொப்பர்
களனஞ்சிக்
கற்ற
செலச்சொல்லா தார்.

(இ-ள் )

உளர ாயினு ம்
செத்தாரோடு ஒப்பர்;
அவைக்களத் தஞ்சித்
தாம் கற்றதனை அ
வர்க்கு இசையச்
சொல்ல மாட்டா
தார். (எ-று).

(இது.
செத்தாரோடு
ஒப்பரென்றது.) இவை
ஐந்தும் அவை
யஞ்சுதலான்

வருங்குற்றம் கூறினர்.
8

729. ஆற்றி

னளவறிந்து கற்க
வவையஞ்சா மாற்றங்
கொடுத்தற் பொருட்டு.

(இ-ள்)

அவையஞ்சாது மறு
மாற்றம் சொ
ல்லுதற்காக, நெறி
யானே அளவு கூறு
நூல்களை அளவறிந்து
கற்க, (எ-று).

அளவு-பிர

மாணம். அது கூறும்

நூல்களாவன;

மீமாம்சை முதலான

நூல்கள். கல்வியாவது

மெய்யாராய்ச்சியான

நூல்களைக்கற்றலும்,

வேத வேதாங்கம்

கற்றலும், உழவும்

வாணிகமும் கற்றலும்,

படைவழங்கல்

ஆகியதண்ட நீதி

கற்றலுமென நான்கு

வகைப்படும் என்பது
கௌடவ்ய மதம் அந்த
நான்கினும் பின்கூறிய
இரண்டும்
சொல்லாண்மை
அன்மையானும்,
வேதம் கேட்டல்
சொல்லாதே
அமைதலானும்,
அவையிற்றைக்
கூறாது தருக்கம்
கற்றார்க்கல்லது மறு
மாற்றம் சொல்லுதல்

அரிதாதலின் அத
னைக் கற்க வேண்டும்
என்று இது
கூறப்பட்டது.
9

730.

வகையறிந்து
வல்லவை
வாய்சோரார்
சொல்லின்
தொகையறிந்த
தூய்மை யவர்.

(இ-ள்)

தப்பினால் வருங்
குற்றத்தை
வகையறிந்து கற்று
வல்ல அவையின்
கண் அச்சத்தினால்
சோர்வுபடச்
சொல்லார், சொற்களின்
தொகுதியையறிந்த
தூய்மையையுடையவர்
(எ-று).

மேற்கூறிய வாற்றால்
கற்றவர்கள் தப்பச்
சொல்லாரென்று அக்க

ல்வியால் வரும் பயன் கூறிற்று.
10

(அமைச்சியல் முற்றிற்று)

---



223

3. பொருளியல்

(5)

# 1. நாடு.

பொருளியலாவது பொருளின் பகுதி கூறுதல். அது கூறிய அதிகாரம் ஐந்தினும் முற்பட்ட பொருளாகுதற்கு இடமாகிய நாட்டியல்பு ஓதிகாரத்தானும், அந்நாட்டிற்கு ஏமமாகிய அரணியல்பு ஓதிகாரத்தானும்,

அ வ் வி ட
ங்களிலாக்கப்பட்ட பொ
ா ருள் ஓாதிகாரத் தானு
ம் ,
அ ப் பொ ா ருளின ா னு ண்
டாக்கப்பட்ட படையியல்
இரண்டதி காரத்தானும்,
(அ ப்படையின்
ந ன்மை ம ய ால ாக்கு ம்
ப டை ட க்செருக்கு
ஓ ரதி கா ரத்த ானு ம்)
கூறப்பட்டது. இஃது அ
மைச்சராற் செய்யப்படு

தலின், அதன்பின் கூறப்பட் டது. அ வற்றுள் நாடாவது நாட்டிலக் கணங் கூறுதல்.

7 3 1.

வருபுனலும்[1] வாய்ந்த மலையும் இருபுனலும்[2] வல்லரணு நாட்டிற் குறுப்பு.

ஆற்று நீரும் வாய்ந்த மலையும் நிலைநீரும் ஊற்று

நீரும் வலிய அரணும்
நாட்டிற்கு அங்கம்.
நாடாக்கும் இ
டத்துயாறெழுகும் இ
டத்தினையும், ப
யன்படுமலையினையும் ,
ஏரி ஆக்கும் நீர்
நிறுத்தலா
மிடத்திளையும் குன்று
கல்வி
நீருண்டாக்கலாமிடத்
திளையும், அரணா
க்கும் இடத்திளையும்

கண்டு, அவ்விடத்தை

நாடாக்குக; அவை

நாட்டிற்கு ருப்பா தலால்,

(எ-று).

இவ்வைந்துங்

குறையாமல்

வெண்டுமென்றது.

1

732.

பிணியின்மை செல்வம்

விளைவின்ப மேம

மணியென்ப

நாட்டிற்கிவ் வைந்து.

( இ -ள் )

நோயின்மையும் ,
செல்வமுடைமையும் ,
விளைவுடைமையும்,
இன்பமுடைமையும் ,
காவலுடைமையு
மென்று சொல்லப் பட்ட
இவையைந்தும்
நாட்டிற்கு அழகென்று
சொல்லுவர், (எ-று).

---

1. இருபுனலும் 2.

வருபுனலும் என்பன

# 224

## 3. பொருளியல்—1.

### நாடு

செல்வம்- ெ
பான்னும் பசுவும் பலவ
ாயின மிகுதல். விளைவ
ா வது, பல
தா ளி ய ங்களு ம்

பொலிவுடைமை. இன்
பமாவது. கண்டும்
கேட்டும் உண்டும்
உயிர்த்தும் உற்றும் இ
ன்புறப் படும்
பொருள்களையுடைமை.
காவலாவது,
மாற்றரசனாலும் தன்
அரசனாலும் நலி
வின்மை. மேல்
நாட்டிற்கு அங்கமாவன
வனை கூறிற்று.
733. நாடென்ப

நாடா வளத்தன
நாட வளந்தரு நாடு.
(இ -ள்)
நா டென்று
சொல்லுவர்

கூறினார், இஃது அழகா
2
நாடல்ல
தேடவேண்டாத வளத்
தினை யுடைய நாட்டை;
நாடல்ல வென்று சொ
ல்லுவர், தேடினால் வளந்

தருகின்ற நாட்டை.
(எ-று).

இஃது, எல்லா
நிலத்திலும் உள்ள
பண்டம்
கலத்தினாலாதல்
காலினாலாதல்
தன்னிடத்தே உ
டைத்தாதலும், தன்
நிலத்தில் உள்ள
பண்டத்தை மிகுதியாக
உடைத்தாதலும்

வேண்டுமென்றது.

734. தள்ளா
விளையுளுந் தக்காருந்
தாழ்விலாச் செல்வருஞ்
சேர்வது நாடு.

(இ-ள்) தப்பாமல்
விளையும் நிலங்களும்,
தகுதியுடையாரும்
ாழ்வில்லாத செல்வரும்
சேருவது நாடு, (எ-று).

தள்ளா
விளையு ள் —

மழையில்லாத
காலத்திலும் சாவி
போகாத நிலம்.
தக்கார்—குலத்தாலும்
குணத்தாலும்
அமைந்தார். தாழ்
வில்லாத
செல்வர்—பிறரால்
இகழப்படாத செல்வர்;
பிறர்க்கும் பயன்படும்
செல்வர் என்றது.
இம்மூன்றும்

எல்லா உயிர்க்கும்
ஆகலின் சேரவேண்டும்
என்று கூறப்பட்டது.
4

735. உறுபசியு
மோவாப் பிணியுஞ்
செறுபகையுஞ்
சேரா தியல்வது நாடு.

(இ-ள்) மிக்க
பசியும், இடையறாத
பிணியும், ஒறுக்கும்

பகையும் சேராது
இயல்வது நாடு.
(எ-று).

இது, சேர்தலாகாதன இவை

என்று கூறிற்று.
5





3. பொருளியல்—1.

நாடு

736. பல்குழுவும்
பாழ்செய்யு
முட்பகையும்
வேந்தலைக்குங்
 கொல்குறும்பு
மில்லது நாடு.

(இ -ள் )
பலவாய்த் திரளுந்
திரட்சியும், பாழ் ஆக்கு
உட் பகையும்,

வேந்தனை ய
லைக்கின்ற (கொலைத்
) தொழிலினை யுடைய
குறும்பரும், இல்லாதது
நாடு. (எ-று).

பாழ்ஆக்கு ம்
உட் பகையாவது,
நாட்டுத்
தலைவராயினும் அதிக
ாரிய ாயினு ம் நா
ட்டைக்கெடுக்குமவர்கள்
. அவை ஆராய்ந்துகடி

ய வேண்டுதலின் இது
கூறப்பட்டது .
6
7 3 7 .
பெ ரு ம்பொ ருளாற்
பெட்டக்க தாகி
யருங்கேட்டா
லாற்ற விளைவது
நாடு.

(இ-ள்) பெரும்
பொ ருளாலே
விரும்பத்தக்கதா கிக்

கேடரி தாலோடே
மிகவும் விளைவது
நாடு, (எ-று).
விரு ் பத்
தக்கது என்றமையால்
பெரும் பொருள்
ஆவது நெல்லு. கேட
ாவது விட்டில், கிளி,
நால்வாய், பெரும் புய
லென் றிவற்றான் வரும்
நட்டம். இதுமேல்
ெ சான்னவும்
சொல்லாதன வு ம்

தொகுத்துக் கூறிற்று.
7

7 3 8 .

கேடறியாக் கெட்ட
விடத்தும் வளங்குன்றா
நாடென்ப நாட்டிற்
றலை.

(இ-ள்)
கெடுதலை
யறியாதாய்க் கெட்
டதாயினும், வளன்
குன்றாத நாட்டினையே

எல்லா நாடுகளிலும் தலையான நாடென்று சொல்லுவர், (எ-று).

இ து

மேற்கூறிய விட்டில் முதலாயினவற்றால் கெட்டதாயினும், பின்பும் ஒருவாற்றால் பயன்படுதல் ஆவது தலையான நாடென்றது.

8

739.
பொறையொருங்கு மேல்வருங்கால் தாங்கி
யிறைவற்
கிறையொருங்கு நேர்வது

RangaRakes

நாடு.

tamilnavarasam.com

3. பொருளியல்—1. நாடு

(இ-ள்) குடிமை செய்தல் பல காலத்திலே பல வரினும் அதனைப், பொறுத்து நிச்சயித்த கடமையை அரசனுக்கு ஒருங்கு கொடுக்கவல்லது நாடு, (எ-று).

தளர்ச்சியைச் செய்தலின் பொறை ஆயிற்று. குடிமையாவது

கடமையொழிய
வருமவை. இதனானே
குடிமக்கள்
பண்புடையராக வேண்டு
ம் என்பது கூறிற்று.
9

740. ஆங்கமை
வெய்தியக் கண்ணும்
பயமின்றே
வேந்தமை
வில்லாத நாடு.

(இ-ள்)

மேற்கூறியவாற்றான் எல்லாம் நேர்ந்ததாயினும், பயனில்லையாம்; வேந்தனது அமைதியை உடைத்தல்லாத நாடு, (எ-று).

இது, நாட்டிற்கு அரசனும் பண்புடைமை கூறிற்று.

---

## 2. அரண்

அரணாவது

அரணிலக்கணங்

கூறுதல்,

யாக வேண்டு

10

மேல் நாட்டிலக்கணங்

கூறினார் நகர்

இலக்கணங்

கூறுகின்றாராதலின்,

அதன்பின் இது கூறப்

பட்டது.

741. ஆற்று

பவர்க்கு மரண்பொரு

ளஞ்சித்தற்

போற்று பவர்க்கும்

பொருள். (இ-ள்)

வலியாற்றுவார்க்கும்

அரண்

மையான் அஞ்சித்

தம்மைக் காப்பார்க்கும்

லால், அதனைச்

செய்யவேண்டும், (எ-று)

•

.

பொருளாம்; வலியின்
அரண் பொருள்; ஆக





2. அரண்

வலியுடையோர்க்கும்
ஒரு காலத்தே
வேண்டுதலின்
வேண்டும் என்றார்.
இஃது அரண்செய்ய

வேண்டும் என்றது.
]

742. மணிநீரு மண்ணு மலையு மணிநிழற் காடுமுடைய தரண்.

(இ - ள்)

தெளிந்த நீராயினும், நிழலும் நீருமிலாத வெறு நிலமாயினும், மலையாயினும், அழகிய

நிழலினையுடைய கா
டா வினும் உடைய
இடம் அரண், (எ-று).
மலைய ரண்
என்றும் காட்டரண்
என்று ம்
கூ று பசேற்ற ரண்
என்பதும் ஒன்றுண்டு.
அதுவும் இவற்றினுள்
அடங்கும். இஃது
அரண் செய்யும் இடம்
கூறிற்று .

7 43 .

உயர்வகலந் திண்மை
யருமைசீந் நான்கி
னமைவ ர ண ர
மென்றுரைக்கு நரல்.

(இ-ள்) உ
யர்ச்சியும் அகலமும்,
திண்மையும்
கிட்டுதற்கு
அருமையுமென்னும்
இந்நான்கினது

அமைதியுடை யது
மதிலா மென்று
சொல்லுவர்நூலோர் ,
(எ-று).

அருமையாவது ,
முதலையும் கிடங்கும்
அடியொட்டியும் முத
லா யினவற்றால்
கி ட்டுதற்கருமை .
அமை வென்றது,
இதனின் மேல்
செய்யப்படாது

எ ன்னு ம்
அ ளவு டைத்த ா த ல்
திண் மை யெ ன் பது
கல்லும் இட்டிகையும்
இ ட்டுச் செய்த ல் .
இஃது
அ ரண்செய்யுமாறு
கூறிற் று .
3

744. முனை
முகத்து மாற்றலர் சாய
வினைமுகத்து

விறெய்தி மாண்ட
தாண்.

( இ - ள்)

முந்துற்ற
முகத்தினை யுடைய
பகைவர் கெடும்படி
யாக, வினை செய்யும்
இடத்து வெற்றியெய்தி
மாட்சிமைப்பட்டது
அரணாவது, (எ-று).



அஃதாவது அட்
டாலகமும்
மதிற்பொறியும் முதலா
யின மதிற்
 றலையில்
அமைத்தல். இது
மதில்
 வேண்டும் என்றது.

RangaRakes

தலையில் கருவிகள் அமைக்க
4

tamilnavarasam.com

## 2. அரண்

745. சிறுகாப்பிற்
பேரிடத்த தாகி
யுறுபகை
ஊக்க மழிப்ப
தரண்.

(இ-ள்) காக்க வேண்டும் இடம் சிறிதாய், மதிலகலம் பெரிய இடத்தை யுடைத்தாய்,

மதி லையுற்ற
பகைவரது மிகுதியைக்
கெடுப்பது அரணாவது,
(எ-று).

சிறுகாவலாவது ஒருபக்கம் மலையாயினும் காடாயினும் நீராயினும் உடைத்தாதல். இஃது இடம் பெரிதாகவும் காவல் சிறிதாகவும் வேண்டுமென்றது. 5



746.

கொளற்கரிதாய்க்
கொண்டகூழ்த்
தாகி யகத்தார் நிலை
லக்கெளிதா நீர தரண்.

(இ-ள்)
பகைவரால்
கொள்ளுதற்கு
அரிதாய்த்,
தன்னகத்தே
அமைக்கப்பட்ட
உணவையும் உடை
டத்தாய்
அகத்துறைவார்க்கு
நிற்றற்கு எளிதாகும்
நீரையுமுடைத்தா
யிருப்பது அரணாவது,
(எ-று).

எனவே ,
புறத்தார்க்கு
நிற்றற் கரிய
நீரை யுடைத்தாக
வேண்டு
மென்றவாறாயிற்று;
அஃதாவது அரசனுக்கு
நீங்குகிற்பதோர் ஆற்றி
னின்றும் பிறர்க்குத்
தோற்றாமல்
சுருங்கையாகப்படுத்து
உள்ளே நீர்புகுதலும்,

மதி லைமுற்றினார்க்கு
அ ை ண ய
நீரின்மையும், இன்றும்
அதனாலே வெற்றி
லையும் பூவும்
உள்ளே உண்டாக் குத
லும் பிறவும் ஆம்
6

747. எல்லாப்
பொருளு முடைத்தா
யிடத்துதவும் நல்லா
ளுடைய தரண்.

(இ-ள்) எல்லா
ப்பொருள்களையும்
உடைத்தாய், உற்ற
விடத்து உதவ
வல்ல நல்ல

வீரரையுமுடையது
அரண், (எ-று).
இது நல்ல
வீரரும் வேண்டும்
என்றது. எல்லாப்
பொருளுமாவது
நுகரவேண்டுவனவும்

படைக்கலங்களும்.
7

748. முற்றியு முற்றா
தெறிந்து பற்றற் கரிய
தரண்.



மறைப்படுத்தும்





2. அரண்

(இ-ள்)
சூழவிட்டும்,
சூழவிடாதே ஒருபக்கம்
மூறிய எறிந்தும்,
அரணுள்ளாரைக்
கீழறுத்தும்
இம்மூன்றினாலும்
கொள்ளுதற்கு அரியது
அரணாவது, (எ-று).

அரண்

கொள்வார்க்கு
உபாயம்

இம்மூன்றல்லதில்லை.
இம்மூன்றினாலும்
கொள்ளப்படாமை
வேண்டும் என்றது.
8

749.

முற்றாற்றி முற்றி
யவரையும் பற்றாற்றிப்
பற்றியார் வெல்வ
தரண்.

(இ-ள்)
சூழவிடுதலைச் செய்து.

மதிலைச் சூழ்ந்து
பொரு
வாரையும் அரணையும்
பற்றுதலைச் செய்து
மதில்தலையைப் பற்றி
யார்வெல்வது
அரணாவது, (எ-று).
இஃது அ
ரணில்லாமையேயன்றி
வெல்லவும் வேண்டும்
என்றது.
9

750,

எனைமாட்சித் தாகியக்
கண்ணும் வினைமாட்சி
யில்லார்க ணில்லை
யரண்.

(இ-ள்)
சொல்லப்பட்ட எல்லா
மாட்சிமையும்
உடைத்தா யினும்,
வினையின்கண்
மாட்சிமை

# செயல்வகை

பொருள் செயல்
வகையாவது
பொருள்தேடுமாறும்
அதனாற் பயன்
கொள்ளுமாறும் கூறுதல்.
இது (மேற் கூறிய)
நாடும் நகரமு
முடையார்க்
குளதாவதொன்றா தலின்
, அதன்பின்

கூறப்பட்டது.

751. செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கு மெஃகதனிற் கூரிய தில்.

(இ-ள்) பொருளையுண்டாக்குக; பகைவரது பெருமிதத்தையறுக்கலாங்கருவி, அப்பொருள் போலக் கூரியது பிறிது இல்லை.

(எ-று).

இது, பொளீட்ட

வேண்டுமென்றது.

752. அருளொடு

மன்பொடும் வாரார்

புல்லார் புரள விடல்.

(இ-ள்) அருளோ

டும் அன்போடும்

வரும் ஆக்கத்தை

பொருந்தாது போக

விடுக,

பொருளாக்கம் வாராத பொருளால் (எ-று).

எனவே பொருள் ஈட்டுங்கால் பிறர் வருத்தத்துக்குப் பரியாதும் பயின்றார் மாட்டுக் காதலழியவும், பொருள் தேடுதலைத் தவிர்க வென்ற வாறாயிற்று.

753. அறனீனு
மின்பமு மீனுந்
திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்.

(இ-ள்) அறத்தையும் பயக்கும்; இன்பத்தையும் பயக்கும்; பொருள் திறனறிந்து பிறர்க்குத் தீமை பயத்தலின்றி வந்த பொருள் (எ-று).

பொருளால்
பயன் அறஞ்செய்தலும்
இன்பம் நுகர்தலும் அன்
றே; அவ்விரண்டினையு
ம் பயப்பது நியாயம
ரகத் தேடின
பொருளாதலின்
பொருள்தேடுங்கால்
ம் என்றது.

RangaRakes

நியாயத்தோடு தேட
வேண்

## 3. பொருள் செ

754.

உறுபொருளு முல்கு

பொருளுந்தன்

னொன்னார்த்

தெறுபொருளும் வேந்தன்

பொருள்.

(இ-ள்) தானே

வந்துற்ற பொருளும்,

ஆயவற்கத்தால் வரும்
பொருளும், தன் பகைவரை யடர்த்துக்கொண்ட பொருளும், அரச னுக்குப் பொருளாம், (எ-று).

உறுபொருள்-காவற்ற பொருள் மேல்

நியாயமாகத் தேட வேண்டும் என்றார்;

இவை நியாயமோ எ

ன்று ஐயுற்றார்க்கு அரசற்த நியாயம் என்று

கூறப்பட்டது.

4

755. குன்றேறி

யானைப்போர்
கண்டற்றாற்
றன்கைத்தொன்
றுண்டாகச் செய்வான்
வினை.

(இ-ள்)
குன்றின்மேலேயிருந்து
யானைப்போர்
கண்டாற் போலும்; தன்
கையகத்து ஒரு
பொருளுண்டாகக்
கொண்டு செய்யத்

தொடங்கினவன்
செய்யும் வினை, (எ-று).
பொருளுடையார்க்குத்
தாம் வருத்தமுறாமல்
பிறரை வினை
செய்வாராகவே
கண்டிருக்கலாமென்றது.

5
756.

ஒன்பொருள் காழ்ப்ப
வியற்றியார்க்
கென்பொரு
ளேனை யிரண்டு

மொருங்கு.

(இ-ள்) ஒள்ளிய பொருளை முற்ற உண்டாக்கினார்க்கு ஒழிந்த அவ்வறமும் காமமுமாகிய பொருளிரண்டும் (ஒருங்கே) எளிய பொருளாக வெய்தலாகும், (எ-று).

மேல் சில பொருளுடையார்க்குப் பொருள் எய்துதல் வருந்

தாமை வரும் என்றார். இஃது அறமும் இன்பமும் எய்தலாமென் கூறிற்று.

757. அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னுஞ் செல்வச்

செவிலியா லுண்டு.

(இ-ள்) அறம் செய்தற்குக் காரணமாகிய அன்பினின்றும் தோற்றின அருளாகிய குழவி, பொருளாகிய நல்ல செவிலித்தாய் வளர்த்தலாலே உண்டாம் (எ-று).



# 232

## 3. பொருள் செயல்வகை மேல்

பொருளுடையாற்கு அறம் எளிதென்றார்; இது பெறுமாறென்னை

என்றார்க்கு, அன்பும் அருளும் இயல்பாக உடை

ய ரா

யினும் பொருளிலராயின்
அவற்றால்
பயனில்லையாம்;
ஆதலால்
பொருளுடையாற்கே
அறஞ்
செய்யலாவதென்று
கூறப்பட்டது 7

758. பொருளல்
லவரைப் பொருளாகச்
செய்யும் பொருளல்ல
தில்லை பொருள்.

(இ-ள்) ஒரு பொருளாக ம
திக்கப்படாதாரையும் பொருளாக
மதிக்கப் பண்ணுகின்ற பொருளையல்லது வேறு
பொருள் என்று சொல்லலாவதில்லை, (எ-று).

மேல் இன்பம் எளிதாகவரும் என்றார்; அஃது எளிதாக வரு
மாறு என்னை?

வடிவில்லாதாரைப்
பெண்டிரிகழ்வார்;
ஆகலின் நன்னெறி
உற்றார்க்குப் பொ
ருளுடை யாரை
யாவரும் நன்கு
மதிப்பரென்று கூறப்பட்ட
து.
8
759.
பொருளென்னும் பொய்யா
விளக்க மிருளறுக்கு
மெண்ணிய தேயத்துச்

சென்றது.

(இ-ள்) பொருள் ஆகிய மெய்யான ஒளி, எண்ணப்பட்ட தேச மெல்லாவற்றினுஞ் சென்று இருள் அறுக்கும், (எ-று).

இருளாவது ஒளியில்லாத இடம். பொருள் உண்டாகப்புக ழுண்டாம்; புகழ் உண்டாக ஒளி எங்கும் பரக்கும் என்றது. அரசன்

பொருளுடையனாயின்
தான் கருதிய
தேயமெல்லாவற்றினும்
தன்னாணை நடக்குமெ
ன்றுமாம்.
9
760· இல்லாரை
யெல்லாரு மெள்ளுவர்
செல்வரை யெல்லாருஞ்
செய்வர் சிறப்பு.
(இ-ள்)
பொருளில்லாதாரை
எல்லாரும் இகழ்வர்,

பொரு ளுடையாரை எல்லாருஞ் சிறப்புச் செய்யர், (எ-று).

சிறப்பெய்தலும் இதனானே வருமென்றது. 10

---



 

4.

படைமாட்சி

.

படைமாட்சியாவது படையினது நன்மை கூறுதல். இது மேற்கூறிய பொருளின் உண்டாமாதலானும், அதனை ஈட்டுதற்கும் காத்தற்கும் படை வேண்டும் என்பதனாலும், அதன்பின் கூறப் பட்டது.

761. உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை

வேந்தன்
வெறுக்கையு
ளெல்லாந் தலை.

(இ-ள்) யானை
குதிரை தேர்
கருவி களாகிய
உறுப்புக்களால்
அமைந்து, இடுக்கண்
உற்றால் அதற்கு
அச்சமின்றி, வெற்றி
யுடையபடை, அர
சன் தேடிய பொரு

ளெல்லாவற்றினு ம்
தலையான பொருள்;
(எ-று).

ஆதலால், படைவேண்

டும் என்றது.

1762. அழிவின்

றறைபோகா தாகி

வழிவந்த

வன்க ணதுவே

படை.

(இ-ள்)

கெடுதலின்றிக் கீழ்
போக ஈதாகிக்
குலத்தின் வழி வந்த
அஞ்சாமையையு டையது
படையாவது, (எ-று).
வழிவருதல்-வீரன்மகன்
வீரனாகுதல். இது,
படையினது தன்மை
கூறிற்று .
2

763. மறமான
மாண்ட வழிச்செலவு

தேற்ற மெனநான்கே
யேமம் படைக்கு.
(இ-ள்) மறமும்,
மானமும்,
நல்வழிச்சேறலும்,
தெளிவு
உடைமையுமென்னும்
நான்கும் படைக்கு
அரணாம், (எ-று).
நல்வழிச்சேறலாவது,
மறஞ்செய்யுங் கால்

அறத்தின் வழிச் செய்யும்
தெளிவு,

கலக்கமின்மை.

மேல்கெடாமை

வேண்டும்

என்றார்; இது

கெடாமைக்குக் காரணம்

RangaRakes

கூறிற்று.

ர

tamilnavarasam.com

## படைமாச்சி

764. கார்தாங்கிச்
செல்வது தானை தலை
வந்த
போர்தாங்குந்
தன்மை யறிந்து.

(இ - ள்)
முன்வந்த படையைப்
பொறுத்து மேற் செல்ல
வல்லது படையாவது;
அ வ்வி டத்துற்ற

போரினைத் தடுக்கும்
இயல் பறிந்து, (எ-று).

இது.
முந்திச் சல் ல
வேண்டுமென் பதூஉ ம்,
செல்லுங்கால் இடமறிந்து
செ ல்ல
வேண் டுமென்பதூஉம்,
கூறிற்று. 4

765. கூற்றுடன்று
மேல்வரினுங் கூடி

யெதிர்நிற்கு
மாற்ற லரியவே
பனை.

(இ-ள்)
கூற்றமானது வெகுண்டு
மேல் வரினும், சிதறாத
லின்றி எதிர் நிற்கவல்ல
வலிமையையுடையது
படையாவது, (எ-று).

இது, மாற்றார்
மேல்வந்தால் நின்று

பொறுக்க வேண்டு
மென்றது.

5

766. உலைவிடத்
துறஞ்சா வன்கண்
தொலைவிடத்துத்
தொல்படைக்
கல்லா லரிது.

(இ-ள்) அரசு
கெடுமிடத்து, வழிவந்த
படைக்கு அல்லது
போர்க்களத்து அழிவ

வந்தவிடத்து உயிர்க்கு
வரும் ஊறுஅஞ்சாத
வன்கண்மை இல்லை,
(எ-று).

தொலை விடம்
என்பதனை முன்னே
கூட்டுக. மேல்வழிவந்த
படை வேண்டும்
என்றார்; அதனால்
பயன் என்னை
என்றார்க்கு, அவர்
தமக்குமுன்பு உள்ளார்

செயலை நினைப்பார்; ஆதலால் அவர்க்கல்லது படைகெட்டால் நிற்றலரிது என்றவாறாயிற்று. 6

767. சிறுமையுஞ் செல்லாத் துனியும் வறுமையு மில்லாயின் வெல்லும் படை.

(இ-ள்) சிறுமை உறுதலும் போகாத்துன்பம் உறுதலும் வறுமையும் இல்லை யாயின் படைவெல்லும், (எ-று).

# 4. படைமாட்சி

சிறுமைஉறுதலாவது, இழிந்தார் பெற்ற சிறப்பு உயர்ந்தார் பெருமை. போகாத்துன்பமாவது, பெண்டிரைக் கைக்கொள்ளுதலும் இளிவரவு செய்தலும் போல்வன. வறுமையாவது கொடாமை. இது படைக்கு அரசன் செய்யும் திறன் கூறிற்று. 7

## 768.

அடற்றகையு மாற்றலு
மில்லெனினுந் தானை
படைத்தகையாற் பாடு
பெறும்.

(இ-ள்)

பகைவரைக்

கொல்லுந் தகுதியும்,

அவர்மேல்

வந்தால் பொறுக்கும் அற்றலும் இல்லையாயினும், சேனையானது படையழகினானே பெருமை பெறும், (எ-று).

படையழகென்றது

(தேர் யானை

குதிரைகளின்) அலங்

காரமும், கொடியும்

குடையும் முரசும்

காளமும்

முதலாயினவற்றால்

அழகு பெறுதல்.

இதுவும் அரசன்
அமைக்க வேண்டு
மென்றது. 8

769.

ஒலித்தக்கா லென்னா
முவரி யெலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும்.

(இ-ள்)

கடல்போல
ஒலித்தக்காலும்
எலியினது மாறு

பாட்டினால்
வருந்திமை
யென்னுளதாம்;
அவ்வொலி நாகம்
உயிர்த்தவளவிலே
கெடும். (எ-று).

இது
படைமிக்கது
வெல்லுமென்று
கருதாது வீரரைத்
தெளிந்தாள வேண்டு

மென்றது.

9

770. நிலை

லமக்கள் சால

வுடைத்தெனினுந்

தானை தலைமக்க

ளில்வழி யில்.

(இ-ள்)

நிலையுடைய

வீரரைப்பெரிது

உடைத்தாயினும்'

,உடையானது தனக்குத்

தலைவனை இல்லாத

விடத்து வெற்றி

யில்லையாம், (எ-று).

இது

படையமைந்தாலும்

படைத்தலைவன்

அமைக்க

வேண்டுமென்றது.

இவையிரண்டும்

படையாளும்

---

RangaRakes

திறம் கூறின. 10





# 5.

# படைச்செருக்கு

படைச்செருக்காவது படையினது வீரியங் கூறுதல். இது படைக்கு

இன்றி யமைய ாதது ஆயினை மயின், அது தன்பின் கூறப் ப ட்டது.

771. உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன் செறினுஞ்சீர் குன்ற லிலர்.

(இ -ள்) ஒன்றுஉற்ற காலத்து உயிர்ப் பொருட்டு அஞ்சாத மறவர்

தம்மரசனால் செறுக்கப்பட்டா ராயினும், தமது தன்மை குன்றுதல் இலர், (எ-று).

மேல்

அதிகாரத்துச்சிறுமை முதலாயின செய்யின் படை வெல்லாது என்றார்; ஆயினும் இயல்பாக அஞ்சாமையுடையார்

வீரிய ஞ்
செ ய் யு மிடத்துக்
குறைய நில்லாமை
வேண்டுமென்றது. 1
7 7 2 .
பேராண்மை யென்ப
தறுக ணொரன்
றுற்றக்கா
லூராண்மை மற்றத
னெஃகு.
(இ -ள் )

ஒருவனுக்குப் பெரிய
ஆண் மையென்று
சொல்லுவர்;
ஒன்றுஉற்றக்கால்
அஞ்சாதலை
அவ்வாண்மைக்குப்
படைக்கலமென்று
சொல்லுவர்
உலகியலறிந்து
செய்தலை, (எ-று).

உலகியலறிதல்-தனக்கு
எளியார்மேல்

செல்லாமை, இது
வீரம் செய்யுங்கால்
எளியாரை அடராமை
வேண்டும் என்றது.
2

773. கான
முயலெய்த வம்பினின்
யானை
பிழைத்தவே
லேந்த லினிது.
(இ-ள்) காட்டகத்து
முயலைப் பட எய்த

அம்பினும்,
யானையைப்
பிழைக்க எறிந்த
வேலை
(எ-று).
இது மேலதற்குக்
காரணமாகக்

RangaRakes

யேந்துதல் இனிது,
வீரற்கு, கூறப்பட்டது.
3

## 5. படைச்செருக்கு

### 774. எ

ன்னைமுன் னில்லன்

மின் றெவ்விர்

பலரென்னை

முன்னின்று கன்னின்

றவர்.

(இ-ள்) என்னுடைய அரசன் முன்னர்ப் பகைவீர்; நில்லா தொழிமின்; முன்னாள் இவன் முன்னே நின்று, கல்லெழுதப்பட்டு நிற்கின்றார் பலராதலான், (எ-று).

இஃது எளியாரைப்

போகச்சொல்லி வே
ண்டுமென்றது.

775. கைவேல்

களிற்றொடு போக்கி
வருபவன்

மெய்வேல்

பறியா நகும்.

(இ-ள்) தன் கையில்

வேலை ஒரு

எதிர்ப்பாரோடு பொர

4

களிற்றோடே போக்கி,

அதன்பின் கருவி தேடிச் செல்லுமவன், தன் மெய்யின் மேற்பட்ட வேலைப் பறித்துக் கருவி பெற்றேனென்று மகிழும், (எ-று).

## வீரர் செயல்

இத்தன்மையதாதலால்,

புண்பட்டால் அதற்காற்றிப்பின்னும்

போரின்கண்ணானும்

செல்ல வேண்டும்

என்றது. 5

776. விழித்தகண்

வேல்கொண் டெறிய

வழித்திமைப்பி
ளோட்டன்றோ
வல்க ணவர்க்கு

( இ - ள்)

மாற்றாரோடு
எதிர்த்துச் சிவந்து
நோக்கின கண்ணிலே
ஒரு வேலினானே
எறிய, அதற்கு
மீண்டும் இமைப்
பராயின், இது
கெட்டதனோடு ஒக்கும்

அஞ்சாதார்க்கு (எ-று).

விழித்தகண் என்பதற்கு மாற்றாரை நோக்கியிமையாத கண் எனினும் அமையும். புண்பட்டால் ஆற்றாராயின் கெட்டதனோடொக்கும் என்றது.

௬

777. விழுப்புண் படாதநா ளெல்லாம்

வழுக்கினுள்
வைக்குந்தன்
னாளை யெடுத்து.

(இ-ள்) தனது வாழ்நாளாகியநாளை யெண்ணி, அவற்றுள் விழுமிய புண்படாத நாளெல்லாவற்றையும் தப்பின நாளாக வெண்ணி வைக்கும் வீரன், (எ-று).



 

5 படைச்செருக்கு
இது போரின்கண்
முகத்தினும் மார்பினும்
புண்படவேண்டும்,
முதுகு
புறங்கொடாமையும்

வேண்டு மென்றது.
7

778. சுழலு

மிசைவேண்டி வேண்டா

உயிரார்

கழல்யாப்புக் காரிகை

நீர்த்து.

(இ-ள்) பரவும் புகழை

விரும்பி உயிரை

விரும்பாதவர் கழல்

கட்டுதல்

அழகுடைத்து, (எ-று).

இது புகழ் விரும்பும்
படை
வேண்டுமென்றது.
8

779. இழைத்த
திகவாமைச் சாவாரை
யாரே
பிழைத்த தொறுக்கிற்
பவர்.

(இ-ள்)
முற்கூறிய வஞ்சினம்

தப்பாமல் சாவாரைத்
தப்பினா
ரென்று
பழிக்கவல்லவர் யாவர்,
(எ-று).
இது வஞ்சினம் தப்பின்
படவேண்டுமென்றது.
9
780. புரந்தார்கண்
ணீர்மல்கச் சாகிற்பிற்
சாக்கா
டிரந்துகோட் டக்க

துடைத்து.

(இ-ள்) தம்மை ஆண்டவரது கண் நீர்மல்குமாறு சாவக் கடவராயின், அச்சாக்காடு எல்லாரானும் வேண்டிக்கொள்ளும் தகுதி யுடைத்து, (எ-று).

இஃது ஆண்டவனுக்குக் கேடுவரின்

படவேண்டுமென்றது.

பொருளியல் முற்றிற்று

10

---

RangaRakes

tamilnavarasam.com 239

4.

# நட்பியல் (5)

## 1. நட்பு

நட்பியலாவது, அறம் பொருளின் பமென்று ம் மூன்றின் க ண் ணு ம்நின்று நன்னெறிக்கண் உய்க்கும் ஆதலின் அதனிலக்கணம் கூறுதல். அரசன் தானும் திருந்தித்திருந்தின

ாரையும் கூட்டிக்
கொ ண் டுநா டு முதலான
பொருளையும் பெற்று
அதனை அழியாமல்
காக்கும் படையை
உ டை ய ர ா யினு ம் ,
காமத்தானாதல் !மயக்கத்
தானாதல் பிறழ ஒழுகுவனாயின், இவை எல்லாப் பொருளையும்
கெடுத்துத் தானும் கெடுவன் எ ன் று அவ்வாறொழுகுங்கால்
தன் னில் பெரியவராகிய ம ந் தி ரி புரோகிதரை ஒளித்தும்,
தன்ஏவல் வழிவரும் அமாத்தியரையும் கேளாதும் ஒழுகுவன்
ஆ த லி ன், அவ்விடத்து உடன்பட்டு நின் று பாதுகாப்பர்
வேண்டும் என்று இப்பொருள் கூறப்பட்டது. அதுகூறிய அதிகாரம்
ஐந்தினும் முற்பட நட்பிலக்கணம் ஓரதிகாரத்தானும், அவரை
ஆராயு மாறு
ஓரதிகாரத்த' னும்,
நட் கப்ப டா தாரிலக்கண ம்

ஓரதி காரத்தானும்
மனத்தினால் நட்பின்றி
நட்டார் போன்று
ஒழுகுவார்
திறன் ஓரதிகாரத்தானும்
கூறப்பட்டது. அவற்றுள்,
நட்பாவது
நட்போர் மாட்டுச் செய்யும்
திறன் கூறுதல்.

781. செயற்கரிய
யாவுள நட்பி னதுபோல்
வினைக்கரிய யாவுள

காப்பு.

(இ-ள்) நட்புப்போல உண்டாக்குவதற்கு அரியன, யாவையுள? அவ்வாறு உண்டாக்கப்பட்ட நட்புப் போலப்பிறர் நல்வினை செய்தற்கு அரிதாகக் காக்கும் காவல் யாவையுள? (எ-று).

இது நட்புத்

தேடலரிது என்றது.

1

782. முகநக நட்பது
நட்பன்று நெஞ்சத்து அகநக நட்பதே
நட்பு.

RangaRakes

நெஞ்சத்

ஈ. நட்பியல்

(இ-ள்) முகத்தொடு முகமகிழக் கொள்ளும் நட்பு நட்பன்று; மனத்தோடு மனமகிழக் கொள்ளும் நட்பே நட்பு. (எ-று).

மேல் நட்பு அரிது என்றார்; உலகத்தும் பலரும் தம்மில்

கலந்தது காணா
நின்றோம்; அஃது
அரிதாயினவாறு
(என்)

என்றார்க்குக்
கூறப்பட்டது.

783. நகுதற்
பொருட்டன்று நட்டல்
மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற்
பொருட்டு.

(இ-ள்) ஒருவனோடு
ஒருவன்
நட்புப்பண்ணுதல்

நகுதற்

பொருட்டன்று;

...கையாயினை

செய்யுமிடத்து

முற்பட்டுக் கழறுதற்

பொருட்டு, (எ-று).

இது மனமகிழ

நட்டலையன்றித்

தீக்கருமங்கண்டால்

கழறவும்

வேண்டுமென்றது.

3784. உடுக்கை யிழ

ந்தவன் கைபோல

வாங்கே

பிடுக்கவ்ள கவ்வாபிவதுச
நா ாு.

(இ-ள்) உடை
இழந்தவன்
கைகுறிப்பின்றித்
தானே
மறைக்குமாறுபோல
, இடுக்கண் உற்ற
அப்பொழுதே அதனை
ப்
போக்கவல்லது
நட்பு, (எ-று).
இது கழறுதலே

அன்றித்துன்பம்
துடைக்கவும்
வேண்டும்
என்றது.

4 ; 85. அழிவி
னவைநீக்கி யாறுய்த்
தழிவின்க

ணல்ல லுழப்பதா
நட்பு.

(இ-ள்) அழிவு
வந்தவிடத்துத்
துன்பத்தை நீக்கி
இன்ப

நெறியின்கண்
நிறுத்திச் செயலற்ற
அழிவு வந்தவிடத்து
அவனோடு
கூட அல்லற்படுவது
நட்பு, (எ-று).

இது ஆண்டாம்
கெடுக்கமாட்டாக்கால்
தானும் துன்பமுற
வேண்டும் என்றது.

786. நட்பிற்கு
வீற்றிருக்கை
யாதெனிற்

ஆவது பாகெதன்னில்,
அதுவும்
இடத்துஊனன்றியாகி
நிற்றல் என்று கொட்
டின்றி வீற்றிருத்தல்
எனக்கூட்டுக.
இதனாற்சொல்லியது;
நட்புத்
திரிவின்றியிருத்தலாவது
நட்டார்க்குத்தளர்ச்சி
வந்தால் தாங்குதல்
என்றவாறாயிற்று.

மேல் கூறினவெல்லாம்
உவந்தா ர் மா ட்டும்
செ ய்யுந்திறன்
கூறிற்றின. இது
செ ல்வ ர்
குறைபாட்டினா ல்
தம்மின் த ாழ்ந்தார்
மாட்டும் செய்யுந்திறன்
கூறி ற்று .
6

787. இளைய
ரிவர்தமக் கின்னம்யா

நினைக்குதல் (எ-று).
இது
மேற்கூறியவாறு
செய்தலேயன்றித்
தான் அவன் என்னும்
வேற்றுமையின்றி
ஒழுக வேண்டும்
என்றது. இத்-
துணையும் நாட்டின்
இலக்கணம்
கூறப்பட்டது.

788. நவிறொறு
நூ ணயம் போலும்
பயிறொறும்
பண்புடை யாளர்
தொடர்பு.

( இ -ள் )

படிக்குந்தொறு ம் நூ ல்நய ம்போல அறிவுதரும் , ப ழகுந்தொறும் ப ண் பு டை ட யா ள ரது நட்பு, (எ-று).

மேல் பொதுவாக

நட்டோர் செய்யும்

திறன் கூறினார். இது

துணை வரனோடு

நட்புக்கொள்ளின், அ

றிவுண் டாமென்று

கூறியது. 8

7 89. புணர்ச்சி

பழகுதல் வேண்டா

வுணர்ச்சிதா

னட்பாங் கிழமை தரும்.

(இ -ன்)

நட்பாதற்குப் பலநாள்பழகுதல் வேண்டா; ஒரு நாள் கண்டாராயினும் உணர்வுடையார்க்கு அவ்வுணர் வுடைமை தானே, நட்பாகும் உரிமையைத் தரும், (எ-று).

மேல் குணவான் அறிவுண்டாக்கும் என்றார்; இஃது ஒத்த

அறிவுடையார்க்கும் கூறப்பட்டது.

RangaRakes

அவ்வறிவுடைமைதானே நட்பாகு மென்று ஒ

tamilnavarasam.com



790. நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப் பின்னீர பேதையார்

நட்பு.

(இ-ள்) பிறை நிறையும் நீர்மைபோல, ஒருநாளைக் கொரு நாள் வளரும் அறிவுடை யாரொடு கொண்ட நட்பு; மதியின் பின்னீர்மைபோலத் தேயும் பேதையாரொடு கொண்ட நட்பு (எ-று).

இஃது

அறிவுடையார் நட்பு வளருமென்பதூஉம் அறிவில்லாதார் நட்புத் தேயுமென்பதூஉங் கூறிற்று.
பின் நட்பாராய்தல் கூறுகின்றாராதலின் இதுபின் கூறப்பட்டது. 10

---

## 2. நட்பாராய்தல்

நட்பாராய்தலாவது நட்டார்க்கு ஆவாரை ஆராய்ந்து கொள்ளு மாறு கூறுதல், இது நட்குங்கால் ஆராய்ந்து நட்க வேண்டுதலின், அதன்பின் கூறப்பட்டது.

791. நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்

விடில்லை நட்பாள்

பவர்க்கு.

(இ-ள்)

(நட்பை

விரும்பியாள்பவர்க்கு)

ஆராயாது நட்புப்
பண்ணுதல் போலக்

கெடுதல் வருவதில்லை;

நட்டபின்பு அவர்க்கு
விடுதலில்லை யாதலால்
(எ-று).

இது ஆராய

வேண்டுமென்றது.

792.

குணனுங் குடிமையுங்
குற்றமுங்
குன்றா இனனு மறிந்தியாக்க
நட்பு.

RangaRakes

1

குன்றா





2 நட்பாராய்தல்

( இ-ள் )

ஒருவனுடைய குணமும் குடிப்பிறப்பும் குற்றமும் குறைவில்லாத சுற்றமும் முன்பே ஆராய்ந்து, பின்பு அவனை நட்பாகப் பிணிக்க, (எ-று).

இவையெல்லாம் ஒத்தனவாயின், உறவு நாள் செல்லும்.

இஃது ஆராய
வே ண்டுவன கூறிற்று.
2
7 9 3 .
குடி ப்பிறந்து
தன்கட் பழிநா ணுவ
வரைக்
கொ ாடுத் துங்
கொளல்வேண்டு நட்பு.
(இ-ள்)
மேற்கூறிய வற்றுள்
உயர்குடி ப்பிறந்து,

(தன்னாட்டுப்) பிறர் சொல்லும் பழிக்கு அஞ்சுமவனை, அவன் வேண்டிய தொன்று கொடுத்தும் நட்பாகக் கொள்க, (எ-று).

கொடுத்தும் கொளல் வேண்டுமென்றமையால் அரசன் நட்பாவாரைக் கூறிற்று.

794.

அழச்சொல்லி யல்ல
வல்லார்நட் பாய்ந்து
(இ-ள்) குற்றம்
கண்டால் 3
தீடித்து வழக்கறிய
கொளல்.
அழுமாறு சொல்லி,
நெறியல்
லாதனவற்றிற்குக்
கழறி,
உலகவழக்கறிய
வல்லாரது நட்பை

ஆராய்ந்துகொள்க,
(எ-று).

இது
மந்திரிகளின் நட்பாவா
ரைக் கூறிற்று. அரசர்
அல்லா தார்க்குத்தம்மில்
உயர்ந்தாரை நட்பாக
வேண்டும் என்று
கொள்ளப் படும் .
4.

795. மருவுக மாசற்றார் கேண்மையொன் றீத்து
ஒருவுக வொப்பிலார் நட்பு.

(இ-ள்)

குற்றமற்றார் நட்பைக்
கொள்க; ஒரு
பொருளைக் கொ
டுத்தாயினும், தனக்கு
நிகரில்லாதார்
நட்பினின்று நீங்குக
(எ-று).

இது குற்றமற்றார்
நட்பைக் கொள்ள
வேண்டும் என்பதூஉம்
நிகர் அல்லாதார்
நட்புத் தவிர

வேண்டும் என்பதூஉம்
கூறிற்று. 5





2. நட்பாராய்தல்

796. ஊதிய மென்ப
தொருவற்குப்
பேதையார்
கேண்மை யொரீஇ
விடல்.

(இ-ள்) ஒருவற்கு இலாபம் ஆவது அறிவிலாதாரோடு நட்பாகுதலை நீங்கி விடுதல், (எ-று).

இது பேதையார் நட்புத் தவிர்கவென்றது. 6

797. உள்ளற்க வுள்ளஞ் சிறுகுவ கொள்ளற்க

அல்லற்க

ணைாற்றுயப்பார் நட்பு.

(இ-ள்) தான்

சிறுகுமவற்றை

உள்ளத்தால்

நினையா

தொழிக; அது

போல, அல்லல்

வந்துவிடத்து

வலியறுப்பாரது

நட்பைக்

கொள்ளாதொழிக,

(எ-று).

இது இழிகுணத்தார்
நட்புத் தவிர்க
வென்றது. 7
798. கெடுங்காலைக்
கைவிடுவார் கேண்மை
யடுங்காலை

யுள்ளினு முள்ளஞ்
சுடும்.
(இ-ள்) கெடும்பொழுது
கைவிடுவாரது நட்பைத்
தன்னைப்

பிறர் சொல்லுங் க
ாலத்து நினைப்பினும்
நினைத்த மனத்தினை
அந்நட்புச் சுடும்;
அவர்
சொல்லுமதனினும்,
(எ-று).
இது கேட்டிற்கு
உதவாதார் நட்பைத்
தவிர்கவென்றது. 8

 கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை
நீட்டி யளப்பதோர் கோல்.

(இ-ள்)
கேடுவந்தவிடத்தினும்
ஒரு பயனுண்டாம்;
அக்கேடு
நட்டாரது
தன்மையை (நீட்டி)
யளந்தறிதற்கு ஒரு
கோலாமாத
லால், (எ-று).

மேல் கெடுங்க

ாலைக்கைவிடுவாரை
விடவேண்டு மென்றார்;
அவரை அறியுமாறென்னை
அறிதல் அரிதென்று கூறிற்று.



யென்றார்க்குக் கேட்டாலல்லது

9



# 245

## 2. நட்பாராய்தல்

800.

ஆய்ந்தாய்ந்து

கொள்ளாதான்
கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும்.
(இ-ள்) குற்றம்
(ஆய்ந்து குணமும் ஆ
ய்ந்து) கொள்ளாதான்
கொண்ட நட்புப்
பிற்காலத்துத் தான்
சாதற்கு ஏதுவான
துன்பத்தைத் தரும், (எ-று).
இஃது ஆராயாமையால்

3.
10

வருங்குற்றங் கூறிற்று.

---

## பழைமை

பழைமையாவது
நட்டோரது உரிமை
கூறுதல். இஃது அவருரி
மையால் செய்
வனவற்றிற்குப் பெ
ாறுக்கவேண்டுமென்று
அதன்பின் கூறப்பட்டது.

801. பழைமை

யெனப்படுவ
தியாதெனின் யாதுங்
கிழமையைக்
கீழ்ந்திடா நட்பு.
(இ-ள்)
பழமையென்று சொ
ல்லப்படுகின்றது
யாதெனின்,
யாதொன்றினையும்
உரிமை
அறுத்தலில்லாத நட்பு,
(எ-று) இது

பழைமையாவது இது
என்று கூறிற்று.
1802. நட்பிற் குறுப்புக்
கெழுதகைமை மற்றதற்
குப்பாதல்
சான்றோர் கடன்:

(இ-ள்) நட்பிற்கு
அங்கமாவது உரிமை;
அவ்வுரிமையாய்ச்
செய்யுமதற்கு
உடம்படுதல்
RangaRakes

சான்றோர்க்கு இயல்பு. (எ-று)





3. பழமை

இது (பேய்ச்சு ரைக்காய்க்குப்) பல காயமும் அமைந்தாலும் உப்பு இன்றாயின் இனிமையுண்டாகாதது போல, உடன்

ப டாரயின்
இனிமைமஇன்றாதலான்
உ டம்ப ட
வேண்டுமென்றது. 2
8 0 3 .

விழைதகை கய ரன்
வேண்டி யிருப்பர் செ
ழுதகையார் கேளாது
நட்டார் செயின்.
(இ -ள்)
நட்டோர் தமது
உரிமையாலே கேளாது

இசையில் லாதவற்றைச் செய்வாராயின் ,
அதற்கு முனியாது அதனையுந் தாமே விரும்பும் தன்மையோடு கூட விரும்பியிருப்பார் மிக்கார், (எ-று).
(இஃது உடன்படுதலன்றி விரும்பவும் வேண்டுமென்றது.) 3
804 .

கேளிழுக்கங் கேளாக்

கெழு த கை மை

வல்லார்க்கு

நாளிழுக்க நட்டார்

செயின்.

(இ-ள்)

நட்டாரது தப்பைப் பு

ரிமையறியவல்லார்க்கு

நட்டோர் நல்ல நாளாம்,

(எ-று)

இது கேளாது

செய்தலே

அமையவேண்டுமென்றது

.

பிறர் சொல்லுங்கால் கேளாத தப்புச்செய்யின், அந்தநாள் அன்றித் தப்புச் செய்யினும் 4

805. அழிவந்த செய்யினு மன்பறா ரன்பின்
வழிவந்த கேண்மை யவர்.

(இ-ள்) தமக்கு அழிவுவரும் காரியத்தைப் பழைய நட்டோர் செய்தாராயினும் அவரோடு உள்ள அன்புவிடார்; முற் காலத்து அன்பின் வழியாக வந்த நட்பையுடையவர்கள் (எ-று).

இது கேடுவருவன

செய்யினும் அமையவே
ண்டுமென்றது. 5
806. பேதைமை
யொன்றோ ா
ரு ருங்கிழமை
யென்றுணர்க நோதக்க
நட்டார் செயின்.
(இ-ள்) தாம்
நோவத்தக்கன வற்றை
நட்டோர் செய்வா
ராயின், அதற்கு
முனியாது ஒன்றில்

# 3. பழைமை

௮0 7.

எல்லைக்க ணின்றார்
துறவார்
தொலைவிடத்துந்
தொல்லைக்க
ணின்றார் தொடர்பு.

(இ-ள்) பழைமை
மயின் கண்ணே நின்றா
ரது நட்பை அவரானே
[illegible] வந்த
விடத்தும் விடார்கள்

ஒழுக்கத்தின் கண்ணே
நின்றார் (எ-று).
எல்லையாவது
வரம்பு. அஃது
ஒழுக்கமாயிற்று
மேற்கூறிய வற்றான்
அமைந்து
விடுதலன்றி
நட்பு விடுதல்
உயர்ந்தோர் செய்யாமை
என்றது.
7

808.

கெடாஅர் வழிவந்த
கேண்மையார்
கேண்மை விடாஅர்
விழையு முலகு.

(இ-ள்)

குற்றம் உண்டாயின்
அவ்விடத்து நட்பினிற்
கெடாதாய்க்
குலத்தின்வழி வந்த
நட்புடையாரது
நட்பை விடுதலின்றிய

லகத்தார் விரும்புவர்,
(எ-று).

இது

பழைமையைக்
கொண்டாடுவாரை
உலகத்தார்தாமும் நட்
பாடுதற்கு விரும்புவர்
என்றது.

809.

விழையார் விழையப்
படுவர் பழையார்கட்

பண்பிற் றலைப்பிரியா
தார்.

(இ-ள்)
விரும்பாதாராலும்
விரும்பப்படுவர்,
பழைய நட்
டோர்மாட்டுக்
குணத்தினின் று
நீங்காதார், (எ-று).
இது பகைவரும்
விரும்புவாரென்றது.
௯ 810. பழகிய

நட்பெவன் செய்யுங்

கொழுதகைமை

செ

ய்தாங் கமையாக்

கடை.

பழகிய நட்பால்
பெறும் பயன்

என்னை? உன்

உரிமையால்
ஒருவன் பிழை செய்த
காலத்து அரசன்தான்

---

# 248

## 4 தீ நட்பு

தீ நட்பாவது தீயகுணத்தாராகிய மாந்தரோடு நட்டதனால் வருங்குற்றங் கூறுதல். மேல் நட்பாராய்தல்

கூறுகின்றுபூ
நட்கப்படாதா ரைக்
கூறி ஈண்டும் கூறுதல்
(கூறியது கூறலாம் பிற
வெனில், அற்றன்று;
அத ஓு ள்
நட்கப்படாதாரைக்
கூறினர் : இதனுள்
அவரால் பயனின்மை
கூறினார். ஆதலின்
வேறு படுத்துக்
கூறப்பட்ட தென்க.
மேல் நட்பினால் வரும்

பயனும் அவரோடு
ஒழுகும் திறனும் கூறினா
ர்; இது நட்பினால்
வரும் பயன் கூறு
கின்றது ஆதலின்
அதன்பிற் கூறப்பட்டது.

811. அமரகத்
தாற்றறுக்குங்
கல்லாமா அன்னார்
தமரிற் றனிமை தலை.

(இ - ள்)
தெருவின்கண்
நெறிப்பட நடந்து

அமரின்கண் ஏறினவன்
வலிமையைக் கெடுக்கும்
. அறிவில்லாத குதிரை
யைப் போல்வார்
தமராவதின் தனியன
ாதல் நன்று, (எ-று).
தனிமை தீ
தென்பது முன்பே
அமைந்துகிடந்தது.
இந்நாட்டின் கொடுமை
யதுவும் நன்றாயிற்று.
தீமைக்கு அளவின்மை
யின் இவ்வாறு

கூறினார். இவ்வுரை மேல்வருவன வற்றிற்கும் ஒக்கும். இது கயவர் நட்புத் தீமைபயக்கு மென்றது.

I

812.

செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை யெய்தலி னெய்தாமை நன்று.

(இ-ள்) நட்புச்செய்து தனக்குப்

பாதுகாவலாகாத புல்லி
ய ரரது புல்லிய நட்பைப்
பெறுவதினும் ,
பெறாமை நன்று,
(எ-று).

இது சிறியார்
நட்புத் தீமையயக்கு
மென்றது. சிறியார்
ஆவார் சூதர்,
வேட்டைக்காரரர், பெண்
டிர் போல்வார்.
2

ஒழுகிய நட்பாகுமதனி

ருபர், ,று நிவுடையார்

டமைகளை கோடிமடங்கு

மிக்க நன்மை ... 

ாம், (எ-று).

இது பேதைமைய

ார் நட்புத் தீமை பயக்கு

மென்றது. 3

814. பருகுவார்

போலினும் பண்பிலார்

கேண்மை பெருகலிற்

குன்ற லினிது.

(ஆ-ள்) கண்
ணினால் பருகுவாரைப்
போலத் தமக்கு அன்பு
டையராயிருப்பினும்,
குணமில்லாதார் ந
ட்புப்பெருகுமதனினும்
குறைதல் நன்று. (எ-று)

இது
குணமில்லாதார் நட்புத்
தீதென்றது.

815. ஒல்லுங்
கரும முடற்று
பவர்கேண்மை
சொல்லாடார் சோர
விடல்.

(இ-ள்)

தம்மாலியலும்
கருமத்தை முடியாது
வருந்துமவர் நட்பை,
நட்பென்று
சொல்லுவதும்
செய்யாராய் வீழவிடுக,

(எ-று).

இஃது

அழுக்காறுடையார்

நட்புத் தீதென்றது.

5

816.

எனைத்துங் குறுகுக

லோம்பன்

மனைக்கெழீஇ மன்றிற்

பழிப்பார் தொடர்பு.

(இ-ள்) சிறிதும்

செறிதலைத் தவிர்க,

மனையின்கண்
நட்டோராயிருந்து.
மன்றின்கண் குற்றங்
கூறுவாரது நட்பைத்
தவிர்க. (எ-று).
இது
குற்றங்கூறுவார் நட்புத்
தீதென்றது.
6
817. கனவினு
மின்னாது மன்னோ
வினைவேறு சொல்வேறு

பட்டார் தொடர்பு.

(இ-ள்)

பயன்படும் நின

வின்கண்ணேயன்றிக்

கனவின் கண்ணும்

இன்னாதாம்

செய்யுந்தொழில்

வேறாக,

சொல்லுங்கூற்று வேறாக

, ஒழுகுவாரது நட்பு,

(எ-று)

இது பொய்கூறுவார்

மிழப்பிறை மென்.

(இ-ள்) செல்வம்

மிக்க காலத்து நட்டு,

அஃது அற்ற காலத்து

நீங்குகின்ற

நிகரில்லாதார் நட்பைப்

பெற்றவதனால் வரும்

நன்மை

யாது? இ

ழந்தவதனால்

வரும்தீமை யாது?

(எ-று).

மக்களுள் இவரோடு ஒத்த இழிவுடையார் இன்மையான், ஒப்பிலாதார் என்றார். அன்றியும் தன்னோடு பொருத்தமில்லாதார் என்றுமாம். இது காலபுருடர் நட்புத் தீதென்றது 8

819. உறுவது

சீர்தூக்கு நட்பும்

பெறுவது

கொள்வாருங்

கள்வரு நேர்.

(இ-ள்)

நட்டோர்க்கும் தமக்கும்

வரும் நன்மை

தீமைகளை நோக்கப்

பார்த்துத் தமக்கு

நன்மையாகுமதனைச்
சீர்மைதூக்கும்
நட்டோரும், பெற்றது
கொள்ளும்
கணிகையரும், கள்வரும்
மேற கூறியவர்களோடு
ஒப்பர், (எ-று)
இம்மூவர்
நட்பையும் ஆராயின்
அவர்களும் தீமை
தருவர் என்றது.

820.

நகைவகைய ராகிய
நட்பிற் பகைவராற்
பத்தடுத்த கோடி யுறும்
.

(இ-ள்)
நகையின் பகுதியார்
செய்த நட்பினும்,
பகைவராலே பத்துக்
கோடி மடங்கு நன்மை
மிகும், (எ-று).

நகைவகையார்

நட்பு ஆகிய
அதனினும்
பகைவராதல்
நன்மைபயக்கும் என்று
பொருள் உரைக்கினும்
அமையும் நகை
வகையர்-காமுகர்
வேழம்பர்
முதலாயினார்.
இவர்கள் நட்புத்
தீதென்றது. பின்
கூடாத நட்புக்கூறுவார்

ஆதலின் இவர்களும் அதற்குரியர் என்பதற்கு



ஈண்டுரைத்தவென்க.
30

---



251

# 5. கூடா நட்பு

கூடா நட்பாவது
சுற்றத்தாராயினும்
பிறராயினும் மனத்-
தகாரால்
நன்னாது நட்டாரைப்
போல ஒழுகுவார்
இயல்பும் அவர் ... ற
ஒழுகுந்திறனும்
கூறுதல். அவர் தாம்
இருக்கையர் தமக்கு ...
ன்றிக் கருமங்! காரண
மாக நட்பாரும்,

பகைவராய் நட்பாரு

டனா .

அவ்விருவகையாரையும்

தீநட்புப்போலக்

கடியவேண்டுமென்றாரின்,

அதன்பின்

கூறப்பட்டது.

821.

இனம்போன்

றினமல்லார் கேண்மை

மகளிர்

மனம்போல வேறு

படும்.

(இ-ள்) நட்டோர் போன்று மனத்தினான் நட்பில்லாதார் நட்பு பெண் மனம்போல வேறுபடும்; ஆதலான் அவருள்ளக் கருத்தறிந்து கொள்க, (எ-று).

இது நட்பாயொழுகுவாரது உள்ளக்கருத்தறிய

வேண்டு மென்றது.

1

822. முகத்தி

னினிய நகாஅ

வகத்தின்னா

வஞ்சரை யஞ்சப் படும்.

(இ-ள்)

முகத்தான்

இனியவாகச்சிரிக்கு

மனத் திலேஞ் பொல்லா

ங்கு நினைக்கும்

வஞ்சரை

பேராண்மை
வேண்டு பவர்.

(இ -ள்)
தமக்குப் பொருள்
மிகுதி உண்டாயினும்,
நிகரல் லாதன
செய்யார்,
தலைமையோடே
கூடப் பெரிய
ஆண்மையை
விரும்புவார், (எ-று).

இது,
'நல்கூர்ந்தகாலத்துச்
செல்வம் உளதாயின்
தமது தன்மை
குறைந்து குடி
செய்தல்
வேண்டாவோ'
என்றார்க்குத்
'தலைமக்கள் செய்யார்'
என்று கூறப்பட்டது.
3

964. தலையி

ளிழிந்த மயிரனையர்

மாந்தர்

நிலையி

னிழிந்தக் கடை.

(இ-ள்)

தலையினின்று நீங்கின

மயிரைப்போல

இழப்படுவர், மாந்தர்

தமது நிலையினின்று

நீங்கித்தாழ ஒழுகின

விடத்து, (எ-று).

மேல் தலைமக்கள்
செய்யார்
என்றார்குக் கூறப்
பட்டது.

RangaRakes

என்றதனாற் குற்றமென்னை

4





2. மானம்

965. குன்றி
னனையாருங் குன்றுவர்

குன்றுவ

குன்றி யனைய

செயின்.

(இ - ள்)

மலை போலப் பெரிய

உயர்வுடையாரும் தம

து நிலைமை குறைவர்;

குறைவு வருவன குன்றி

அளவாயினும் செய்

வாராயின், (எ-று).

இது,

மிக்காராயினும்

இகழப்படுவ ரென்றது.

இத்துணையும் தன்மை மறைய ஒழுகுதல் ஆகாது என்று கூறப்பட்டது.

5

966.

புகழின்றாற் புத்தேணாட்
டுய்யாதா லென்மற்
றிகழ்வார்பின் சென்று
நிலை.

(இ-ள்) இம்மைப் பயனாகிய புகழைத்

தாராதாயின், மறுமைப்
பயனாகிய சுவர்க்கத்துப்
புகுத லில்லை ஆயின்,
தன்னை
இகழ்ந்துரைப்பார்பின்
சென்று
ஒருவன் நிற்கின்றது
பின்னை என்ன பயனைக்
கருதி? (எ-று).

இது. தன்னை
யென்றது
இகழ்வார் மாட்டுச்

சென்று நிற்றலைத்தவிர்க
6

967. ஒட்டார்
பின்சென்றொருவன்

வாழ்தலி னந்நிலையே
கெட்டா னெனப்படுத

லன்று.

(இ-ள்) ஒருவன் தன்னை இகழ்வராபின் சென்று வாழும் அவ்வாழ்க்கையின், அவர்பால் செல்லாத அந்நிலையே நின்று கெட்டானென்று பிறரால் சொல்லப்படுதல் நன்று, (எ-று).

மேல் இம்மை
மறுமையில் பயன்படாது

என்றார்; அஃது
எற்றுக்குப் பொருள் பயக்குமே என்றாற்குக் கூறப்பட்டது. இவை இரண்டும் இகழ்வார்பால் சேறல் ஆகாது என்பது கூறிற்று. 7

968. மருந்தோமற்
றூனோம்பும் வாழ்க்கை
பெருந்தகைமை
பீடழிய வந்த
விடத்து.

(இ-ள்) தமது பெரிய
தகைமை வலியழிய
வந்தவிடத்துச்
சாவாதே இருந்து
உயிரோம்பி வாழும்
சாவாமைக்கு
மருந்தாமோ, (எ-று).

RangaRakes

# 296

## 2. மானம்

பெருந்தகைமை
அழியவந்தவிடத்
தென்று கூட்டுக.
இஃது அதற்கு அழிவு
வரவுளதாயின் சாவ
வேண்டும் என்றது.
8

969.

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்.

(இ-ள்)

ஒருமயிர் நீங்கின்
உயிர் வாழாத
கவரிமானைப் போன்ற
மானமுடையவர்.
அம்மானம்
அழியவரின்

உயிரைவிடு வ ரர்,
(எ-று).
மேல் சாவ
வேண்டும் என்றார்;
அது செய்யல்
ஆகுமோ என்றார்க்கு,
மானமுடையார் சாவர்
என்ற து .
9

970.
இளிவரின் வா ழாத
மான முடையா

ரொளிதொழ கேக்கு
முலகு.
(இ ள்)
இளிவரவு உண்
டானால், உ யிர்
வாழாத மானமுடையா
ரது புகழைத் தொழுது
துதிக்கும் உலகு,
(எ-று).
மேல்சா வ ரர்
எ ன் றத ன ாற்
ப யனென்னை

என்றாற்கு இது கூறப் பட்டது
10

---

3.

# பெருமை

பெருமையாவது மேன்மை; அஃதாவது சிறியர் செய்வன செய்யாமை. அது பின்பு காணப்படும்.

இது
மானமுடையார்க்கு
உளதாவ
தொன்றாதலின்
அதன்பின்
கூறப்பட்டது.
அன்றியும்
குடிப்பிறந்தார்க்கு
உளதாகும் நற்குணம்
எனினும் அமையும்.
இவ்
வுரைமேல்
வருவன வற்றிற்கும்

ஒக்கு ம்.

குணங்கள் பலவும்

சேரக்

கூறுகின்றாராகலின்

அதன்பின்



கூறப்பட்டது.





## 3. பெருமை

971.

பிறப்பொக்கு

பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ்
சிறப்பொவ்வா
செய்தொழில்
வேற்றுமை யான்.

(இ-ள்) எல்லா வுயிர்க்கும் பிறப்பால் ஒரு வேறுபாடில்லை; ஆயினும், தத்தம்செய் தொழிலினது ஏற்றச் சுருக்கத்தினாலே ெ பருமை ஒவ்வாது, (எ-று).

எனவே,
பெருமையாவது
குலத்தினான்
அறியப்பட்டா தென்ப
தூஉம் அதற்குக்
காரணமும் கூறிற்று.

972.

மேலிருந்து மேலல்லார்
மேலல்லர்
கீழல்லார் கீழல்ல வர்.
(இ-ள்)

மேலான

இடத்திலிருந்தாலும்.

I

கீழிருந்துங்

மேன்மையில்லா

தார் மேன்மக்களாகார்;
கீ ழான
இ டத்திலிருந்த ாலு ம்,
கீ ழ் ை ம யில்லாதார்

கீழ்மக்களாகார், (எ-று)
.
இ டமென்பது
செல்வ த் தின ா ல்
இருக்குமிடம். இது
செல் வத்தினால்
பெரியாரையும்
பெ ரிய ாரென்று
கொள் ளப்பட
தென்றது .
2

973. இறப்போ
ரிருந்த தொழிற்றாஞ்
சிறப்புந்தான்
சீரல் லவர்கட் படின்.
(இ - ள்)
செல்வமானது தனக்கு
நிகரில்லாத ரர் மா ட்டே
நிற் ரூமாயின், நிதியை
இறப்பா ரீடத்தே
பொ ருந்தி ன
தொழிலை ை டைத்தாம்.
(எ-று).

சீ ரல்லவ
ர் -பெ ரிய வ ரல்லவ ர் .
மே மற்கூறியவற்றிற்குக்
கா ரணம் கூ றிற்று.
3

974. பெருமை
பெருமித மின்மை
சிறுமை
பெருமித மூர்ந்து விடும்.
(இ-ள்)
பெருமையாவது
செருக்கின்மை;

கிளை மேற்கொ

ாண்டொழுகுமாதலான்,
(எ-று).



சிறுமை செருக்



# 298

## 3. பெருமை

மேல்,

குலத்தினாலும்
செல்வத்தினாலும்

பெரியாரைப்
பெரியாரென்று
கொள்ளல்
படாதென்றார்; இனிப்
பெருமையிலக் கணங்
கூறுவார், முற்படச்
செருக்கில்லாமையே
பெருமையென்று
கூறப்பட்டது.
4
975. அற்ற
மறைக்கும் பெருமை

சிறுமைதான் குற்றமே
கூறி விடும்.

(இ-ள்)

பெருமை பிறருடைய
குறையை மறைத்துச்
சொல் லும்; சிறுமை
அவர்க்குள்ள
நன்மையைச்
சொல்லுதலைத்
தவிர்ந்து குற்றத்தையே
சொல்லிவிடும், (எ-று).

இது, புறம்

கூறாமை
பெருமையென்று
கூறப்பட்டது. 5

976.

ஒளியொருவற் குள்ள
வெறுக்கை
யிளியொருவற்
கஃதிறந்து வாழ
மெனல்.

(இ-ள்)

ஒருவனுக்கு

மணப்பெருமை புகழாம்;
அதனை நீங்கி
வாழுமென்று பிறர்
சொல்லுதல்
ஒருவனுக்கு
இளிவாயாதலான் (
எ-று).
இது,
மிகக்கொடுக்க
வல்லாரைப் பெரியரெ
ன்று கூறிற்று. 6
977. ஒருமை

மகளிரே போலப்
பெருமையுந்
தன்னைத்தான்
கொண்டொழுகி னுண்டு.
(இ-ள்) தன்னைப்
பிறர் விரும்பும்
காலத்தினும், தன்
உள்ளம் பிறரை விரும்பும்
காலத்தினும்
வேண்டியவாறு ஒழுகாத
கற்புடைய மகளிரைப்
போலப் பாதுகாத்து

ஒருவன் ஒழுகுவனாயின்
பெருமை யுண்டாம்;
அல்லது இல்லையாம்.
(எ-று).
இது.
பெருமையாவது
நிறையுடைமை
என்றுகூறப்பட்டது 7
978. பெருமை
யுடையவ ராற்றுவா
ராற்றி
னருமை யுடைய

செயல்.

(இ-ள்)

பெருமையுடையவர்

நெறியினானே

செய்யவல்லர்;

செய்த ற்கு

அருமையுடைய

செயல்களை,

இது, செய்தற்கு அரிய

செய்வார்

RangaRakes

(எ-று).

பெரியரென் றது.
8





## 3. பெருமை

979. சிறியா ருண
ர்ச்சியு ளில்லை
பெரியாரைப்
பேணிக்கொள்
வேமென்னு நோக்கு.

(இ-ள்) சிறுமையுடைய

ார் உணர்வின்கண்
இல்லை; பெரு
மையுடையாரைப்
போற்றித்
துணையாய்க் கொள்க
(எ-று).

எனவே, பெருமை
மயுடையார் மாட்டு
ஒழுகு. இது.
பெரியாரைப் பேணுத
ல் கூறிற்று.

980. பணியுமா
மென்றும் பெருமை

கொள்வே மென்னும்
உண்டு என்றவாறா
ம் பெருமையென்று
9
சிறுமை
யணியுமாந் தன்னை
வியந்து.

(இ-ள்)

செல்வமும் கல்வியும்
தனக்கு உள்ளதாகும்
காலத்துந் தாம் பணிந்
தொழுகுவர் எந்நாளும்
பெருமைக்குணம்
உடையார்;
சிறுமைக்குணம்
உடையார் அவை
உளதாம்
காலந்தொடங்கித்
தம்மை வியந்து
கொண்டு அணிவர்

(எ-று).

இது பணிந்

தொழுதலும் பெருமை

என்றது. 10

---

# 4.

## சான்றாண்மை

சான்றாண்மையாவது

நற்குணங்கள்

பலவற்றானும் அமைந்

தார்

இலக்கணங் கூறுதல்.
இது பெரும்பான்மையும்
அறத்தினால்
தலையளிசெய்தொழுவ
ாரை நோக்கிற்று.

981. இன்மை
யொருவற் கிளிவன்று
சால்பென்னுந்
திண்மையுண் டாகப்
பெறின்.

(இ-ள்)

ஒருவனுக்குச்
சாஸ்பாகிய நிலைமை
உண்டாகப் பெறின்,
பொருளின்மை
இளிவாகாது, (எ-று).
இஃது.
அமைதியுடையராதல்
RangaRakes
பெறுதற்கரிதென்றது.
1

## 4. சான்றாண்மை

982.

கொல்லா நலத்தது
நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது
சால்பு.

(இ-ள்)

தவத்திற்கு உறுப்பான
சீலங்கள்

பல உளவாயினும்

கொல்லாத

நலத்தையுடையது

தவம்; அதுபோலச்

சான்றாண்மைக்

குணங்கள் பல வாயினும், பிறரது பழியைச் சொல்லாத நலத்தை யுடையது சால்பு, (எ-று).

மேற்கூறிய

சால்பிற்கு இலக்கணம்

கூறுவார்,

முற்பகட்புறந்

சொல்லாமை எல்லாக் குணத்தினும் இன்றிமையாதாக வேண்டும் என்று கூறினார்.

2

983.

அன்புநாண் ஒப்புரவு
கண்ணோட்டம்
வாய்மையொடு ஐ
ந்துசால் பூன்றிய
தூண்.

(இ-ள்) அன்புடைமையும் பழிநாணுதலும் ஒப்புரவுடைமையும் கண்ணோட்டமும் மெய்யுரையுமென்று சொல்லப்பட்ட ஐந்தும் சால்பினைத் தாங்குந் தூண், (எ-று).

இவை ஐந்தும்
சால்பிற்கு அ
ங்கமென்றது.
3

984.

குணநலஞ் சான்றோர்
நலனே பிறநல
மெந்நலத் துள்ளதூஉ
மன்று.

(இ-ள்)

சான்றோர்க்கு நலமா
வது
குணநல்லராகுதல்; அ
க் குணநலம், பிற
நலமாகிய எல்லா
நலத்திலும்

உள்ளதொரு நல

மன்று, (எ-று).

இது,

குணநலம் சால்பிற்கு

அழகென்றது.

4

985.

ஆற்றுவா ராற்றல்

பணித லதுசான்றோர்

மாற்றாரை மாற்றும்

படை.

(இ-ள்)

பெரியாரது பெ

ருமையாவது

எல்லார்க்கும் தாழ்ந்

தொழுகுதல்;

அதுவே சான்றவர்

மாறுபட்டவரை

வெல்லும் கருவி,

எ-று).

இது சான்றவர்க்கு

வாறு.

RangaRakes

வலியாவது
தாழ்ந்தொழுகுதல்
என்ற

5





4.
சான்றாண்மை

986.
சால்பிற்குக் கட்டளை
யாதெனிற் றோல்வி

துலையல்லார்
கண்ணுங் கொளல்.

(இ-ள்)

சால்பிற்கு அளவு
யாது எனின்,
தோல்வியைத் தனக்கு
நிகர் அல்லாதார்
மாட்டும் கொள்ளுதல்
என்றவாறு.

இஃது, எல்லார்க்கும் இனிமை செய்யவேண்டும் என்றது. 6

987.

இன்னாசெய் தார்க்கு
மினியவே

செய்யாக்கா லென்ன
பயத்ததோ சால்பு.
(இ-ள்) தமக்கு
இன்னாத
செய்தவர்கட்கும்
இனியவற்றைச்
செய்யாத காலத்துச்
சால்புடைமையால்
பயன்யாதோ, (எ-று).
இஃது,
இன்னாதார்க்கும்
இனிமை

செய்யவேண்டும் என்
றது.

7

928. கடனெ
ன்ப நல்லவை யெல்ல
ாங் கடனறிந்து
சான்றாண்மை
மேற்கொள் பவர்க்கு.

(இ-ள்)
உலகியற்கை அறிந்து
சான்றாண்மையை
மேலிட்டுக் கொள்ளும்

அவர்களுக்கு
நல்லவாயின எல்லாம்
இயல்பு என்று சொ
ல்லுவர் அறிவோர்,
(எ-று).

இது, மேற்கூ
றிய வாறே அன்றி
நற்குணங்கள் எல்லாம்
வேண்டும் என்றது.
8

989. ஊழி
பெயரினு ந்

தா ம்பெயரா ர்
சான்றாண்மைக்
காழி யெனப்படு வார்.

(இ - ள்)

சான்றாண்மைக்கு ஒரு
கடல் என்று பிறரால்
சொல்லப்படுமவர்கள்,
காலம் தனது தன்மை ம
குலையினும் நின்ற
நிலை தலையசார்,
(எ-று).

இது, சான்றார்

நின்ற நிலை குலையா ர் என்றது. 9

990. சான்றவர் றாங்காது

RangaRakes

**சான்றாண்மை குன்றி னிருநிலந்தாங் மன்னோ பொறை.**





4. சான்றாண்மை

! இ - ள் )

சான்றார் தமது

தன்மை குறைவர்

ஆயின் பெரிய நிலமானை

து உயிர் முதலாகிய

பாரத்தைத் தாங்குதல்

கழியும், (எ-று)

அ வர்களும்

தானுமாய்ப்

பொறுக்கின்றத ணைத்

தனிப் ( பாறுக்கல்

ஆகாது என்று

ஆயிற்று. மேல்
ஊழிப்பெயரினும்
ஏன்றோர் நிலை
குலையார் என்றார்;
இது, சான்றோர்
நிலை
தலையின் ஊழிப்பெயரு
ம் என்றது.
10

5.

பண்புடைமை

பண்புடைமையாவது
யாவர் மாட்டும்
அவரோடொத்த
அன்பினராய்க்
கலந்தொழுகுதலும்
அவரவர்
வருத்தத்திற்குப்
பரிதலும்,
பகுத்துண்டலும்
பழிநாணலும்
முதலான
நற்குணங்கள்

பலவும் உடைமை.
இது பெரும்
பான்மையும்
பொருளினால்
தலைப்பயனி செய்வாரை
நோக்கிற்றா தலான்
மிற்கூறப்பட்டது.

991.

அன்புடைமை யான்ற
குடிப்பிறத்த
லிவ்விரண்டும்
பண்புடைமை

யென்றும் வரூக்கு.

(இ-ள்) யாவர் மாட்டும் அன்புடைமையும் அமைந்த குடியின்கண் பிறத்தலும் ஆகிய இவ்விரண்டும் பண்புடைமை என்று உலகத்தார் வழங்கப்படுகின்றது, (எ-று)

அன்பு உடையவனாகப் பிறர்

வருத்தத்திற்குப்
பரிதலும், கலந்து
ஒழுகுதலும்,
கொடுத்தலும்
முதலாயின உளவாம்;
குடிப்பிறப்பினானே
பழிப்படுவ
செய்யாமையையும்
புறங்கூறாமையும்
முதலாயின உளவாம்;
ஆதலான்
பண்புடைமை என்று
கூறப்பட்டது

யென்னும் வழக்கு.

(இ-ள்) யாவர் மாட்டும் எளிய காலத்தை உடையவன் எய்துதல் எளிது என்று சொல்லுவர், பண்புடைமை என்று வழங்கப் படுகின்ற இதனை, (எ-று).

எளிய காலம் ஆவது, எல்லாரும் தத்தம் குறை

சொல்லு தற்கு எளிய
செவ்வி , அஃதுடைய
ார்க்குப் பண்புண்டாம்
என் றது . இது
பெருமையும் பாண்மையும்
அரசரை நோக்கிற்று,
மேற்கூறிய வகை யே
யன்றி இதனாலும்
பண்புண்டாம் என்று
கூறப்பட்டது. 2

993 .

நகையுள்ளு மின்னா
திகழ்ச் சி

பகையுள்ளும்
பண்புள பாடறிவார்
மாட்டு.

( இ -ள் )

அறிவார் மாட்டு
நகையாடுதலின்
கண்ணும் இகழ்ச்சி
தோற்றுமாயின்
இன்னாதாம்;
பகையாகுமிடத்துப்
பண்பு தோற்றுமாயின்
பெருமை உளதாம்,
(எ-று).

எனவே,

அறியாதார் மாட்டு
இவை இரண்டும்
இல்லையாம்
ம என்றவாறாயிற்று.
இகழ்ச்சி என்றது
பண்பின்மை இஃது
அறி
வுடையார் மாட்டு
ஒரு தலையாகக்கெ
ன்றது.

994.

நயனொடு நன்றி
புரிந்த

பண்புபா ராட்டு

முலகு.

(இ-ள்) பிறரால்

விரும்பப் படுத

கொண்டு ஒழுக வேண்டும்

ஊ

பயனுடையார்

லோடே கூட நன்னெறியின்

கண்ணே பொருந்தின

பெருளுடையாரது

குணத்தினை உலகம்

கொண்டாடும்,

(எ-று).

இவை, எல்லாரும்

(இ-ள்) பண்புடையாரைத் தோற்றி உலகமாகிய பலவகை உயிரும் உண்டாயிற்று; அத்தோற்றம் இல்லையானால் அவ்வுயிர்கள் எல்லாம் மண்ணின்கண் புக்குமாய்வது நிலை, (எ-று).

இது, பண்புடையார் பிறத்தலானே உலகநடை தப்பாமல் வருகின்றது என்றது. 5

# 996. நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம் பகலும்பாற் பட்டன் றிருள்.

(இ-ள்) எல்லாரோடும் கூடி இருந்து நகுதலைச் செய்ய மாட்டாதார்க்குப் பெரிய உலகம் பகற் பொழுதும் இருளின்பாற்

பட்டது. (எ-று).

எனவே, இவனும் அறியான், அறிவிப்பாரும் இல்லை என்ற வாறாயிற்று. இது. கலந்து ஒழுகாமையால் வரும் குற்றம் கூறிற்று. 6

997.

பண்பிலான் பெற்ற
பெருஞ்செல்வ நன்பால்
கலந்தீமை
யாற்றிரீந் தற்று.

(இ-ள்)
குணமில்லாதவன்
பெற்ற பெரிய செல்வம்
நல்ல பால் கலத்தின்
தீமையால் கெட்டாற்
போலத் தனக்கும்
பிறர்க்கும் இன்பம்
பயவாது கெடும், (எ-று).

இது.
பகுத்துண்ணாமையால்
வரும் குற்றம் கூறிற்று.
7

உ௯௮.

நண்பாற்றா ராகி நயமில
செய்வார்க்கும்
பண்பாற்றா ராதல்
கடை.

(இ-ள்) நண்பு
செய்யமாட்டாரராய்
விருப்பமில்லாத வற்
றைச் செய்வார்க்கும்
குணமாயின செய்யா
ராதல் குணமுடை
யார்க்கு இழிவு. (எ-று).

குணம்

செய்யாமை இன்னா
செய்தலாம். ஆதலால்
பிறர்
வருத்தத்திற்குப்
பரியாமையால் வரும்

குற்றம் கூறிற்று.
8



305

5. பண்புடைமை

999.

உறுப்பொத்தன்
மக்களொப் பன்றால்
வெறுத்தக்க
பண்பொத்த
லொப்பதா மொப்பு.

(இ-ள்) மக்கள் ஒப்பாவது உறுப்பு ஒத்தலன்று; செறியத் தக்க குணங்களை ஒத்தல்; அதனை

ஒப்பதே ஒப்பாவது.
(எ-று).

செறியத் தக்க குணங்கள் உளவாதலின் செறியத் தக்க குணம் என்றார். பண்பு இல்லாதார் மக்களல்லர் என்றது.
9

1000.

அரம்போலுங்

கூர்மைய ரேனு
மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா
தவர்.

(இ-ள்)

அரத்தை ஒத்த
கூர்மையை
உடையராயினும்
மக்கட் பண்பு இல்லாத
மாந்தர் மரத்தை
ஒப்பர். (எ-று).

அரம் போலும்
தனக்குள்ள கூர்மை,
பிறர் மாட்டு மடியாமை

யும் தான் பிறரைக் கூரியர் ஆக்குதலும் ஆம், இஃது உணர்வுடை யார் ஆயினும் உணர்வில்லாத மரத்தை ஒப்பார் என்றது; என்னை? உணர்வால் பயன் இன்மையின். 10

---

# 6. நன்றியில் செல்வம்

நன்றியில்
செல்வமாவது
அறத்தையும்

இன்பத்தையும் பயவாத
செல் வ த்தி ய ல்பு
கூறுதல். இது
பண் பிலாதார்க்
குளதா வ-
ெ தான்றாதலின் ,
அ தன் பின்
கூறப்பட்டது.

1 0 01.

அன்பொரீஇத் தற்செற்
றறநோக்கா தீட்டிய

வொண்பொ ருள்
கொள்வார் பிறர்.

(இ-ள்)

பொருள் தேடுங்கால்
பிறர்மாட்டு அன்பு
செய்தலையும் நீக்கி,
அது தேடினான்
நூகர்தலுமின்றி,
அறத்தையுஞ் செய்
யாது, தொகுத்த
ஒள்ளிய பொருளைக்

RangaRakes

கொள்வார் பிறர்.
(எ-று).



# 306

## 6.

## நன்றியில் செல்வம்

இது.

நன்றியில்

செல்வமாவது

இத்தன்மையது

என்பதூஉம், அது

பிறர் கொள்வர்

என்பதூஉம் கூறிற்று

பிறர் என்றது தன் வ

ழியில் உள்ளார் அ

ல்லாதாரை.

1

1002. ஈட்ட

மிவறி யிசைவேண்டா

வாடவர்

தோற்ற நிலக்குப்

பொறை.

(இ-ள்)

பொருளீட்டுதலை

விரும்பிப் புகழை

விரும்பாத மாந்தர்

பிறத்தல் நிலத்துக்குப்

பாரமாகும் (எ-று).

இத்தன்மையோர்

பிறப்பதனினும்

பிறவாமை

நன்றென்றது. 2

1003.

வைத்தான்வாய் சான்ற

பெரும்பொரு

அஃதுண்ணான்
செத்தான்
செயக்கிடந்த தில்.

(இ-ள்) இடன்
நிறைந்த
பெரும்பொருளை
யீட்டிவைத்தா
னொருவன் அதனை
நுகரானாயின்,
செத்தான்; அவன்
பின்பு செய்யக் கிடந்தது
யாதுமில்லை, (எ-று).

இஃது, ஈட்டினாலா
ாயினும் தானொரு
ியன் பெறானென்றது.
3
1004.
அற்றார்க்கொன்
றாற்றாதான் செல்வ
மிகநலம் பெற்றா
டமியண்மூத் தற்று.
வறியவர்க்கு
ஒன்றைக்
கொடுக்கமாட்டாதான்

பெற்ற பெரிய செல்வம்
மிக அழகினைப்
பெற்ற ஒருத்தி
கொழுநனையின்றி
மூத்துத்தமியளாய்க்
கழிந்தது போலும்
(எ-று)
தமியள் மூத்தல்
தன்னைப் பிறர்க்கு
ஈவாரின்றித்
தமியளாகி மூத்தல்.
இது செல்வம் தானும்

ஒருபயன்
பெறாதென்றது.
4

1005.

எச்சமென்
றென்னெண்ணுங்
கொல்லோ வொருவரா
னச்சப் படாஅ தவன்.

(இ-ள்)
ஒருவராலும்
நச்சப்படாத

செல்வமுடையவன்,
தனக்குப் பின்பு நிற்
குமென்று யாதனை
இது,
புகழில்லையா
மென்றது.



எண்ணுமோ? (எ-று).







## 6. நன்றியில் செல்வம்

1006. பொருளானா
மெல்லாமென் றியா
திவறு மருளானா
மாணைப் பிறப்பு.

(இ-ள்)
பொருளினாலே
எல்லாச்சிறப்பும்
எய்தலாமென்று
அயாதே உலோகின்ற
மயக்கத்தினாலே மா
உண்டாம், (எ. று).

இது.

பிற ர்க்குக்
கொடுத்தலும் தா ம்
அது நுகர்தலும்
இ ல்லாத ா ர்க்கு ப்
பலகோடிப் பொருள்
உண்டாயினும் அவை
இன்மையோ டொக்கும்
(எ-று).

இது நல்கூர்ந்தா
ரோடொப்பரென்றது.
7

1008. ஏதம்

பெருஞ்செல்வந்
தான்றுவ்வான்
றக்கார்க்கொன் றீத
லியல்பிலா தான்.
(இ-ள்)
தானுந் துவ்வாது
தக்கார்க்கும் ஒன்று
ஈயாத இயல்
பினை யுடையான்
பெற்ற பெருஞ்
செல்வம் குற்றமாய்.
(எ-று).
இஃது

இறுதிபயக்கும்
என்றது.
8

1009. சீருடைச்
செல்வர் சிறுதுனி
மாரி
வறங்கூர்ந் தனைய
துடைத்து.
(இ-ள்)
சீர்மையை உடைய
செல்வர் சிறிது
துனியால் ஈயா தொ

ழிதல், மாரி பெய்யா
மை மிக்காற் போலும்,
(எ-று).
மேற்கூறிய
நன்றியில்செல்வ
முடையாரன்றி,
நற்செல்வ முடையாரும்
பிறர்க்கு ஈயாராயின்,
மழை பெய்யாக்கால்
உலகம் துன்பமுறுமாறு
போலத்
துன்புறுமென்றது.

பிறரால்
நச்சப்படாதவனது
செல்வம், ஊர்நடுவுள்
பழுத்து நிற்பதொரு
நச்சுமரம் பழுத்ததன்மை
மத்து, (எ-று).
இது,
தமதாசையால்
தின்பாருண்டாயின்,
அவரைக்
கொல்லுமென்றவாறாயிற்று

---

# நாணுடைமை

அறம்பொருள்
இன்பங்களிற் பிறர்
பழி
யாம லொழுகுதல்.
இது
பண்புடைமையின்
பின் கூறற்பாலது
ண்பின்மையும் சேரச்

சொல்ல வேண்டுதலின்
பண்பு இன்மையாகிய
நன்றியில்
செல்வத்தைக் கூறி
அதன்பிற்
கூறப்பட்டது.

1011.

ஊணுடை யெச்ச
முயிர்க்கெல்லாம்
வேறல்ல
நா
ணுடைமை மாந்தர்

சிறப்பு.

(இ-ள்)

உணவும் உடையும்

ஒழிந்தனவும் புன்மக்க

ளெல்

லார்க்கும் வேண்டும்;

தலைமை மக்களுக்கு

அது நாணுடைமை,

(எ-று).

இது, நாணம்

வேண்டுமென்றது.

1012. ஊணைக்

குறித்த துயிரெல்லா
நல்லமை குறித்தது
சால்பு.

விசேடமாக வேண்டும்;

நாணென்று

(இ-ள்)
மேற்கூறிய
எல்லாவற்றினும்
உண்டியைக் கரு
திற்று பலவகை

உயிரும் அதுபோல

நாணாகிய நன்

மையைக் கரு

திற்றுச் சால்பு, (எ-று).

இது.

சான்றோர்க்கு

நற்குணங்கள் யிறும்,

இஃது இன்றிய

மையாதென்றது.

RangaRakes

பலவும் வேண்டுமா

## 7. நாணுடைமை

1013.

நாணா லுயிரைத்

துறப்ப

ருயிர்ப்பொருட்டா

னாண்டுறவார்

நாணாள் பவர்.

(இ-ள்) நாண்

பொருட்டாக

உயிரைத்துறப்பர்,

உயிர்ப்
பொருட்டாக

நாணைத்துறவார்,

நாணம் வேண்டுவார்,

(எ-று)

இது, நாண்

உயிரினும்

சிறந்ததென்றது.

1014. நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலர் மேலாயவர்.

(இ-ள்) நாண்

ஆகிய வேலியை

அமைத்துக்கொள்

வார்கள்

அல்லது பெரிய

உலகத்தினைப்

பெறுதற்கு

விரும்பார்கள் மேன்

மக்கள் என்றவாறு.

இது, நாணம் அழியவரும் பொருள் கொள்ளார் என்றது.
இது, பொருளினும் நாணம் சிறந்தது என்றது. 4

1015.

அணியன்றோ
நாணுடைமை
சான்றோர்க்கஃ
தின்றேற் பிணியன்றோ
பீடு நடை.

(இ-ள்) சான்றோர்க்கு நாணுடைமை அழகன்றோ? அஃதில்லையாயின், பெரிய நடை நோயன்றோ? (எ று).

இது.

சான்றோர்க்கழகாவது
நாணுடைமை

யென்றது.     5

1016.

பிறர்நாணத் தக்கது
தானாணா னாயி
னறநாணத் தக்க
துடைத்து.

(இ-ள்) உயர்ந்தார் பலரும் நாணத்தகுவ தொன்றனைத் தான் நாணாது செய்வனாயின், அவனை அறம் நாணியடையா தொழியும் தகுதியுடைத்தாம், (எ-று).

இது,
நாணமில்லாதாரை
அறம் சாரா தென்றது.

6

1017.

குலஞ்சுடுங் கொள்கை
பிழைப்பி
நாணின்மை நின்றக்
கடை.

RangaRakes

ஞலஞ்சுடு



310

7. நாணுடைமை

(இ-ள்) ஒழுக்கம்
தப்புமாயின், அத்
தப்புதல் குலத்தினைச்
சுடும்; அது போல
நாணின்மை
நிற்குமாயின், தமது
நலத்தினைச்
சுடும். (எ-று).
இது, நலமில்லையா
மென்றது.

1018. நாணகத்

தில்லா ரியக்க

மரப்பாவை நாணா

லுயிர்மருட்டி யற்று.

(இ-ள்) மனத்தின்கண் நாணமில்லாதார் இயங்குமது, மரப்பாவை கயிற்றினால் இயங்கி உயிருள்ளது போல மயக்குமதனை ஒக்கும், (எ-று).

இது,

நாணமில்லாதார்

மக்களல்லரென்றது.

8

1019.

கருமத்தா னாணுத

னாணுத் திருநுத

னல்லவர் நாணுப் பிற.

(இ-ள்) தாம்

செய்யும்

வினையினாலே

நாணுதல் நாணம்;

அஃதல்லாத நாணம் அழகிய நுதலினாலே நல்லாராகிய கணிகையர் நாணத்தோ டொக்கும், (எ-று).

மேற்கூறிய

நாணம் எத்தன்மைத்

ளென்றார்க்கு, இது

கூறப்
பட்டது.

9
1020.

பிறர்பழியுந் தம்பழியு
நாணுவார்[1] நாணுக்
குறைபதி யென்னு
முலகு.

(இ-ள்) பிறர்க்கு வரும் பழியையும் தமக்குவரும் பழியையும் அஞ்சி நாணுமவர்களை நாணுக்கு இருப்பிடமென்று சொல்லுவர் உலகத்தார், (எ-று).

இது, தம்பழிக்கு நாணுதலேயன்றிப் பிறர்பழிக்கும் நாண வேண்டுமென்றது

மணக். பாடம்.



 

# 8. குடி செயல் வகை

குடிசெயல் வகையாவது தம் குடியையோம்புதல் வேண்டுமென்று

கூறுதல். இது ந

ரணமுடை யார்

செ ய்தலாத லின்

அதன்பின் கூ

றப்பட்டது.

1021.

நல்லாண்மை யென்ப

தொருவற்குத்

தான்பிறந்த

வில்லாண்மை

யாக்கிக் கொளல்.

(இ- ள்)

ஒருவனுக் கு மிக்க
ஆ ண் மை யெ ன் று
சொல்லப் படுவது ,
தான் பிறந்த
குடியை ஆளுத லு
டை மை ய
மனத்தின் [illegible]
பெருக்கிக் கோ டல் .
(எ-று).

அளுதலுடைமை-குடி
யோ ம் புத லை
எப் பொழுதுஞ்

சிந்தித் தல். எனவே, இது குடியோம்புதல் வேண்டுமென்றது.

1022.

அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்து மாற்றுவார் மேற்றே பொறை.

(இ - ள்)

பொறுத்தல், (எ-று).
இஃது ஒரு
குடிப்பிறந்தார் பலர்
உளரா யினா ரல்
அ வருள் மூத் த
வாருக்குங் கடனோ
எல்லார்க் கும்
கடனோ என்று
ஐயு ற்ற ார்க்கு க்
கூறப்பட்டது .
2
1023. ஆங்

விணையு ம ரன்ற
வறிவு மெனவிரண் டி
னின்விணையா ளீருங்
குடி.

( இ - ள்)

முயற்சியும் நிரம்பின
அறிவும் என்று
சொல்லப் பட்ட
இ ரண்டின ாலும்
வளருகி ன்ற
விணையினாலே குடி

உயரும்.
(எ-று)

இது ஒரு
வினையைச்
அறிய
வேண்டுதலின்
அறிவு



செய்யுங்கால் நல்
லதும் தீயதும்
வேண்டும் என்று
கூறப்பட்டது.

8. குடி செயல் வகை

வளருகின்ற வினையாவது ஒரு வினையைச் செய்து முடித்தால் அவ்வளவிலே நின்று அமையாது பின்னும் ஒரு வினையைத் தொடங்குதல், மேல்

குடி ஓம்ப வேண்டும் என்றார்; அஃது ஓம்பு மாறு என் னை எ ன்றார்க்கு இது கூறப்ப ட்டது,
3

1024. கருமஞ் செயவொருவன் கைதூ வே னென்னு ம் பெருமையிற் பீடுடைய தில்.

( இ-ள்)

ஒருவன் கை கருமஞ் செய் தலினாலே உண் டிலே னென்று சொல்லுகின்ற பெருமை போலப் பெருமை யுடையது பிறிது இல்லை, (எ-று).

மேல்

எப்பொழுதும் இடைவிடாமல் வினைசெய்ய வேண்டும் என்றார். அது பெரியோரால் செய் யலாகுமோ

என்றார்க்கு இதனின்
மிகுந்ததோர்
பெருமையில்லையென்
றது. 4

1025.

இடும்பைக்கே
கொள்கலங் கொல்லோ
குடும்பத்தைக் குற்ற
மறைப்பா னுடம்பு.

(இ-ள்)

சுற்றத்தார் மாட்டு
உளதாகிய குறையை

மறைக்
கக் கருதுவான்
உடம்பு, துன்பத்துக்குக்
கொள்கலமாம், (எ-று)
மேல் ஒழியாது
கருமம் செய்தல்
பெருமை என்றார்;
அது து ன்ப மாக்கும்
என்றா ர்க்குத்
துன்பத்த்ற்கு நாணல்
ஆக" து, அதனால்
புகழாதலான் என்று

கூறப்பட்டது.

5

1026.

குடிசெய்வார்க் கில்லை
பருவ மடிசெய்து
மானங் கருதக் கெடும்

(இ -ள் )

குடியோம்புவார்க்கு
நன்மை பருவம்
இல்லையாம்;
தங்குடும்பத்தின்
குறையை நினைத்து

மடிசெ
ய்தலினாலுளதாகும்
குற்றத்தை நினைக்கக்
கெடும் ஆதலான், (என்
று).

இது. குடிசெய்வார்
இன்பநுகர்ச்சியை
விரும்பாரென்று
மேல்
துன்பத்திற்குக்
கொள்கலம்

RangaRakes

ஆக வேண்டும்
என்றார்;



# 313

## 8. குடி செயல் வகை

அவ்வாறு துன்புற்று
ஒழுகுதல் ஆகுமோ
என்றார்க்குக் கூறப்
பட்டது.

1027. குடிமரமற் றானே
தாழா துஞற்று

(இ-ள்) தங்குடியைத்
உயர்த்துவார்க்கு அவ்வுயர்ச்சி

(ஏ - று)

6

முடிவெய்துந் தங்குறை

யைக்

பவர்க்கு.

தாழச்செய்யாதே

உயரச்செய்யக் எண்ணாமல் (தானே)

முடிவுபெறும்.

யாதானும் ஒரு

வினையை முடியுமாறு

எண்ணி அதன்பின்
முயன்று முடிக்க
வேண்டும் அன்றே
இஃது அவ்வாறன்றி
இ வண்
க ரு தின வ ள வி லே
அ வர து
நல் வினைதானே
முடிக்கும்; இவன்
.,ஏ/ தனை
மே மற்கோட லே
வே வண் டு வ
தென்றவாறு ஆயிற்று.

7

1028. குடி செய்வ லென்னு மொருவற்குத் தெய்வ மடிதற்றுத் தான்முந் துறும்.

(இ-ள்) குடியையோ ம்புவேனென்று கருதிமுயலுமவனுக்குத் தெய்வம் மடிதற்றுத் தான் முற்பட்டு

முயலும் (எ-று).

மடிதற்றல்-தொழில்செய்வார் ஆடை உடுப்பதோர்திறன். மேல் சுற்றத்தார் நல்வினை இலராயின் ஓம்புமாறென்னை என்றார்க்குத் தெய்வம் அருள் செய்யும் என்று கூறப்பட்டது. இத் துணையும் குடிஓம்புதல் வேண்டும்

என்று கூறிற்று.
2

1029. குற்ற
மிலனாய்க் குடிசெய்து

வாழ்வானைச்
சுற்றமாச் சுற்று

முலகு.

(இ-ள்)
குற்றப்பட ஒழுகுத

லிலனாய்த் தன்குடியை

யோம்பி

வாழுமவனை, உலகத்தாரெல்லாரும் தமக்குச் சுற்றமாக நினைத்துச் சூழ்ந்து நிற்பர், (எ-று).

இது குடி
ஒப்புவார்க்குப் பயன்

கூறிற்று.

9

1030.

இடுக்கண்கால்
கொன்றிட
நல்லா ளிலாத குடி.



வீழ மடுத்தூன்று

# 8. குடி செயல் வகை

(இ- ள்)

இ டும்பைய ாகிய
நவியம் அடித்தாரை
வெட்டு தலானே விழும்;
ப க்கத்தி லே மடுத்து
ஊன்றுகின் ற
முட்டுக்கோல் போலத்
தாங்க வல்ல நல்ல
ஆண் மகன் இல்லாத

குடியாகிய மரம், (எ-று).

இது. குடியோம்புவாரில்லாக்கால் அக்குடி கெடுமென்று கூறப்பட்டது.

உழவாவது உழவின்



---

## 9. உழவு

திறனும் அதனால் பயனும் கூறுதல்.

இது குடி செய்வா
ர்க்கு இ
ன்றியமையாமையின்
அதன்பின் கூறப்
பட்டது.

உழவு

தொழில் வரைவு
வாணிகம் சிற்பம்
வித்தை என்று
சொல்லப்பட்ட
அறுவகைத் தொழிலும்
குடி செய்வார்க்கு
வேண்டும் அன்றே, அ

வையெல்லாவற்றின் இயல்பும் கூறாதார், உழவு ஒன்றும் கூறியது எற்றுக்கு எனின்? அவற்றுள் கல்வி பொருள்தரும் என்பது முன்பே கூறப்பட்டது. தொழிலாவது ஒருவன் ஏவல் செய்தல். அரசரேவலால் அமைச்சர் செய்யும் தொழில் அமைச்சியலுள்

கூறப்ப ட்டது.
ஏனையோ யார் செய்யும்
தொழிலும் வரைவுவ
ாணிகமும் சிற்பமும்
மேலை அதிகாரத்தில்
'ஆள்வினையும் ஆன்ற
அறிவும் என இரண்
டின் நீள்வினையால்
நீளும் குடி' என்றத
னா லே
சொன் னாராம்.
என் னை?
அவை யெல்லா ம்

முயற்சியா ளும்
அறிவா ளும்
வருதலின். ஆயின்
உழவும் அதனுள்
அடங் காதோ எனின்?
அடங்கும். அஃது
ஈண்டுத் தொழிலை
நோக்கிக் கூறப்பட்டது
அன்று. முயன்று
ஈ: பாருளீட்டினால்
எல்லாரும் குடி

ஓம்புங்கால்
தானியத்தால் ஓம்ப
வேண்டும் என்று
கூறப்பட்டது.



வேண்டுதலின் அதனை
உண்டாக்க





9. உழவு

1031.

சுழன்றுமேர்ப் பின்ன
துலகம் மதனார

ஒழுகின்ற முறைமை
தலை.
(இ-ள்) உழவு
ஒழிந்த எல்லா
நெறிகளினும் சுழன்று
திரிந்தாலும், ஏரின்
வழியே வருவர்
உலகத்தார்;
ஆதலான், வருந்தியும்
உழவே
தலைமையுடைத்து,
(எ-று).

இஃது உழவு
வேண்டுமென்றது.

1

1032.

தொடிப்புழுதி
கைசா வுணைக்கிற்
பிடித்தெருவும்
வேண்டாமற் சான்று
படும்.

(இ-ள்) ஒரு
பலப்புழுதியைக்

ைகசாக
உணைக்குவனாயின், ?ரு
ைகயாற் பிடித்த
எருவும் இடாமல்
அமைவு படும், (எ-று).
மேற்கூறிய
உழவு செய்யுந்திறன்
கூறுவார் முற்படப்
புழுதி
ப|ணாக்க
வேண்டுமென்றார்.

1033. ஏரிறை

நன்றா மெருவிடுதல்

கட்டபி

னீரிறை நன்றதன் காப்பு

.

(இ-ள்)

உழுகின்றதனினும்

நன்றாம்

2

எருவிடுதல்; ஊளை

கட்ட பின்பு நீர்

விடுதலினும் நன்றாம்

அழியாமற் காத்தல்.

(எ-று).

இது, பல்கால்

உழவு

வேண்டுமென்பதூஉம்,

எருவிட வேண்டு

மென்பதூஉம், களைபறிக்க வேண்டுமென்பதூஉம், பசுப்புகுதாமற் காக்கவேண்டுமென்பதூஉம் கூறிற்று. 3

1034.

செல்லான் கிழவ

செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து
இல்லாளின் ஊடி விடும்.

(இ-ள்)

நிலத்திற்கு உரியவன்
நாடோறும்
அந்நிலத்தின்கண்
செல்லாது
மனையகத்திருப்பனாயின், அது தான்
செல்லாமையினாற்
புலந்த

இல்லாளைப் போலப்
புலர்ந்துவிடும், (எ-று).

இது, நாடோறுஞ்சென்று பார்க்க வேண்டுமென்பதூஉம் பாராக்கால் பயன் குன்றும் என்பதூஉம் கூறிற்று. இவை ஒன்றினானும் உழுந்திறம் கூறிற்று 4

1. "கசா" என்பது
மனைக். பாடம்.





9. உழவு

1035. இரவா
ரிரப்பார்க்கொன் றீவர்

கரவாது கைசெய்தூண்

மாலை யவர்.

(இ-ள்) பிறரை இரவார்; தம்மை இரப்பார்க்குக் கரத்த லின்றி யாதொன்றாயினும் ஈவர்; கையாலே உழவுத் தொழிலைச் செய்து உண்ணும் இயல்பினையுடையார்க்கு, (எ-று).

உழவினால்

பயன் கூறுவார்

முற்பட இல்லறம்

செய்வது இவர்

கண்ணது என்று

கூறினார்.

5

1036.

உழவினார்

கைம்மடங்கி னில்லை

விழைவதூஉம்

விட்டேமென் பார்க்கு

நிலை.

(இ-ள்) உழவை யுடையவர் அத்தொழிலைச் செய்யாது கைம்மடங்குவராயின், யாதொரு பொருளின்கண்ணூம் விரும்புதனையும் விட்டோமென்பார்க்கு அந்நிலையின்கண் நிற்றல் இல்லை, (எ-று).

எனவே,

துறவறத்தின்கண்

நிற்பாரை நிறுத்துதல்

உழுவார் கண்ண

தென்று.

1037.

உழுதுண்டு வாழ்வாரே
வாழ்வார்மற் றெல்லாந்
தொழுதுண்டு பின்செல்
பவர்.

(இ-ள்)

உலகின்கண் வாழ்வார்
உழுதுண்டு
வாழ்வாரே; மற்று

வாழ்வாரெல்லாம்
பிறரைத் தொழுது
உண்டு அவரேவல்
செய்கின்றவர், (எ-று).

இது.

செல்வமாவது
உழவினால் வருஞ்
செல்வமென்றது. 7

1038. பலகுடை
நீழலுந்
தங்குடைக்கீழ்க்

காண்ப ரலகுடை நீழ

லவர்.

(இ-ள்) பல அரசர் குடை நிழலையும் தம்மரசன் குடைநிழற் கீழே வரக்காண்பர், குடை அல்லாத நிழலை யுடையவர், (எ-று).

குடைஅல்லா நிழலாவது பைங்கூழ் நிழல். இது, தாம்

வாழ்தலே யன்றித்

தம்மரசனையும்

RangaRakes

வாழ்விப்பரென்றது.

8

tamilnavarasam.com

317

9. உழவு

1039. உழவா
ருலகத்திற்[1] காணிய∴
தாற்றார்
தொழுவாரே
யெல்லாம் பொறுத்து.

(இ-ள்) உலகமாகிய தேருக்கு அச்சாணிபோல்வார் உழவரே; அதனைச் செய்யாதவர் பிறர்பெருமிதத்தினால் செய்வனவெல்லாம் பொறுத்துத் தொழுது நிற்பர், (எ-று).

இஃது, உழுவார் தம்மையும் அரசனையும் பெரியராக்குதலன்றி உலகத்தையும் தாங்குவரென்று கூறிற்று. 9

1040. இலமென் றசைஇ யிருப்பாரைக்[1] காணி
னிலமென்னு நல்லா ணகும்.

(இ-ள்)
பொருளிலே மென்று
தளர்ந்து
இருப்பாரைக் கண்

டால், நிலமாகிய
நல்லாள் இகழ்ந்து
நகும், (எ-று).

இது. நிலம்
மடியில்லாதார்க்கு
வேண்டியது
கொடுக்கு
மென்றது.

10.10

---

# நல்குரவு

நல்குரவாவது பொருளில்லாதார்க்கு உளதாகுங் குற்றங் கூறு தல். இஃது உழவில்லாதார்க்கு உளதாவ தொன்றாதலின், அதன் பின் கூறப்பட்டது

1041.

இன்மையி னின்னாத
தியாதெனி னின்மையி
னின்மையே யின்னா
தது.

(இ-ள்)

நல்குரவுபோல
இன்னாதது
யாதெனின், நல்குரவு
போல
இன்னாதது தானே,
(தானே-நல்குரவே).

(எ-று).

இது, தன்னை யொத்த இன்னாதது பிறிதில்லையென்றது 1

---

1. " யிருப்பாரை



" என்பது மணக். பாடம்.

## 10. நல்குரவு

1042. இன்மை
யெனவொரு பாவி
மறுமையு மிம்மையு
மின்றி விடும்
(இ-ள்)
நல்குரவென்று
கூறப்படுகின்ற
நிகரில்லாத பாவத்தை
யுடையவன்,

இம்மையின் கண்ணும்
மறுமையின்கண்ணும் நுகர்ச்சியின்றிவிடும்,
(எ-று).

தாளம்
பண்ணாமையால், மறுமையிலும்
நுகர்ச்சியில்லையாயிற்று. இது
இன்பமில்லையாக்கு
மென்றது.

2

1043. தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக
நல்குர வென்னு நசை.

(இ-ள்)
தொன்று தொட்டு வருகின்ற குடிப்பிறப்பினையும் வடிவழகினையும் ஒருங்கு கெடுக்கும்; நல்குரவென்று சொல்லப்படுகின்ற ஆசைப்பாடு, (எ-று).

நல்குரவு

ஆசையைப் பண்ணுதலினால்.

ஆசையாயிற்று.

தோல் ஆகு பெயர்.

இது, குலத்தினையும் அழகினையும் கெடுக்கு மென்றது.

3

-

1044. நற்பொரு ளுணர்ந்து

சொல்லிலும்

நல்கூர்ந்தார்

சொற்பொருள் சோர்வு

படும்.

(இ-ள்) நல்ல

பொருளை மிகவும்

ஆராய்ந்து

சொல்லினும்,

நல்கூர்ந்தார்

சொல்லும் பொருள்

சோர்வு படும். (எ-று).

ஏற்றுக் கொள்வாரில்லை யென்றவாறாயிற்று. இது, கல்வி கெடும் என்றது. 4

1045.

அறந்சாரா நல்குர

வீன்றதா யானும்

பிறன்போல நோக்கப்

பருவம்.

(இ-ள்)

அறத்தைப் பொருந்தாத நல்குரவாளன், தன்னைப் பெற்ற தாயாயினும் ஏதிலாரைப் போல நோக்கப் படுவான், (எ-று).

அறம் சாரா நல்குரவாவது .

பொருளும் இன்பமும்
சிந்தித்து
நல்கூர்தல். இது,
சுற்றத்தாரும்



கைவிடுவர் என்றது.
5



319

## 10. நல்குரவு

1045.

நெருப்பினுட் டுஞ்சலு
மாகு நிரப்பினுள்
யாதொன்றுங் கண்பா
டரிது.

(இ-ள்)

நெருப்பினுள்ளே
கிடந்து உறங்கலும்
ஆகும்; நிரம்பிடும்பை
யுள் உறங்குதல் யா
தொரு காலத்தினும் அ
ரிது (எ-று)

இஃது,
உறங்கவொட்டா
தென்றது.

6

1047. இன்றும்
வருவது கொல்லோ
நெருநலுங் கொன்றது
போலு நிரப்பு.

(இ-ள்)

இன்றும்
வரும்போலும்;

நெருநலும் என்னைக்
கொன்றது போலும்
நிரப்பிடும்பை, (எ-று).

இது.
நாடோறும் அச்ச
முறுத்து மென்று
கூறியவாறு. 7

1048.

இற்பிறந்தார்
கண்ணேயு மின்மை
யிளிவந்த

சொற்பிறக்குஞ் சோர்வு தரும்.

(இ-ள்)

நல்குரவு, குடிப்பிறந்தார் மாட்டேயும் இளிவரவான சொற்கள் பிறக்குஞ் சோர்வினை உண்டாக்கும், (எ-று).

இது குடிப்பழி உண்டாக்கும் என்றது.

1049. நல்குர
வென்னு மிடும்பையுட்
பல்குரைத் துன்பங்கள்
சென்று படும்.

(இ-ள்)
நல்குரவாகிய
துன்பத்திலுள்ளே
பலதுன்பங்களும் சென்று
தோற்றும் (எ-று).

குரை-அசை.

மேற்கூறிய வேயன்றி

எல்லாத் துன்பமும் உ

ண்டாமென்றது.

9

1050. துப்புர

வில்லார் துவரத்

துறவாமை

யுப்பிற்குங் காடிக்குங்

கூற்று.

(இ-ள்)

நுகரும்பொருள்

இல்லாதார்

அப்பொருளின் மேற்
பற்றறத்
துறவாது வருந்துதல்,
வேண்டி, (எ-று).



உப்பிற்குங் காடிக்குங்
கேடாக





## 10. நல்குரவு

துறப்பா ராயின்
நன்றென்றது நல்கூ

ர்ந்த ார்க்குத் துன்ப
முறுதலின்றி, இன்ப
நுகரும் நெறியுளவோ
என்றார்க்குத் துறப்
பாரா யின்,
இன்பமுறலா மென்று
கூறப்ப ட்டது.
10

---

## 11. இரவு

இரவாவது

பிறர்மாட்டுச்சென்
றிரந்து கோடல்.
இது நல்கூர்ந்தார்
செயலாதலின், அதன்
பின் கூறப்பட்டது.

1051. இரக்க

விரத்தக்கார்க் காணிற்
கரப்பி
னவர்பழி தம்பழி
யன்று.

(இ-ள்) தமக்கு
இல்லாதவிடத்து

இரக்கத்தக்காரைக் காணின், இரந்து கொள்க; அவர் இல்லையென்பராயின். அஃது அவர்க்குப் பழியாம்; தமக்குப் பழியாகாது, (எ-று).

ஈண்டுக் கூறுகின்ற இரத்தல் எல்லார்மாட்டுஞ் செய்யலாகா தென்பதூஉம், தக்கார்

மாட்டி

ரத்தலாமென்பதூஉம்

கூறிற்று. 1

1052.

இரப்பாரை யில்லாயி

னீர்ங்கண்மா ஞால

மரப்பாவை

சென்றுவந் தற்று.

(இ-ள்)

குளிர்ந்த

இடத்தையுடைய

பெரிய உலகம்
இரக்கு மலர்களை
உடைத்தல்லவாயின்
இதனின்
உள்ள மக்களது
இயக்கம் மரப்பாவை
சென்றுவந்து இய
ங்கினாற்போலும்,
(எ-று).
மேற்கூறிய
இரத்தல் இழிந்தது
ஒன்று அன்றே;

இதனைச்
செய்க என்று
விதித்தது என்னை
உலகியல்பாதலான்.
இரத்தல் தென்றது.

RangaRakes

என்றார்க்கு
இரத்தலும் ஈதலும்
இழிவென்று
கொள்ளப்படா

2

tamilnavarasam.com

## 11. இரவு

1053. சுவர்க்க
ணென் றைண் டாந்
தோற்ற மிரந்துகோண்
மேவாரில் லாத கடை.

(இ-ள்)
இரந்து கோடலைப்
பொருந்துவார்
இல்லாதவிடத்து ஈயக்
கருதியிருப்பார்
மாட்டுப் புகழ்
யாதான் உண்டாம்,

(எ-று).

இரந்து கோடல் இழிபல்ல ஆயினும் பழிக்கப்படும் என்றார்க்குப் பழிக்கப்படுமாயின் உலகத்து இரப்பாரில்லையாம்; அவரில்லாராகப் புகழுடையார் இலராம்; ஆதலால், (இரவு) பழிக்கப்படாதென்று கூறப்பட்டது.

1054. இன்ப

மொருவர்க்கிரத்த
துன்ப முறாஅ வரின்.
(இ-ள்)
இரத்தல் ஒருவர்க்கு

3

லிரந்தவை
இன்பமாம்; இரக்கப்பட்ட
பொருள்கள் தான்
வ ருத்தமுற ாத வகை
எய்துமாயின், (எ-று).
பழிக்கப் பட
ாதாயினும் துன்பம்
ஆகுமே என்றார்க்கு

வே ண் டின
பொருள்பெறின்
துன்பமாகாது என்று
கூறப்பட்டது. இவை
மூன்றினாலும் இரவு
தீது என்பாரை
மறுத்தவாறாயிற்று. 4
105 5.
இகழ்ந்தெள்ளா
தீவாரைக் கண்டின்
மகிழ்ந்துள்ள
முள்ளுளுவதுாக்குமா
த்து.

(இ-ள்) இ
ரப்பாரைக் கண்டா ல்
உ தாசாரித்தலும்
இன்றி, அவர் சொன்
ன மாற்றத்தை இக
ழ்ந்துரைத்தலும் செய்
ய ாது,
வேண்டப்பட்டதனைக்
கொடுப்ப ா ரைக்
காணில், இரந்து
சென்றவர் மனம்
ம கி ழ்ந்துநின்று
உள்ளுள்ளே இன்பு

றுந் தன்மையுடைத்தா
ம் (எ-று).
மே மல்
இ ர க்கத்தக்க ா ர்
ஆவார்
த்தன்மைய ார்
என்றார்க்கு இ து
கூ றப்பட்ட து.
5
1056. இரத்தலு
மீதலே போலுங்
கரத்தல்
கனவிலுந் தேற்றாதார்

மாட்டு .

(இ -ள்)

க ர த்த லைக்

கஙாவின்கண் ணும்

அறியாதார்மாட்டு,

இரந்து சேறலும்

கொடுப்பதனோடு

RangaRakes

ஒக்கும். (எ-று).

# 11. இரவு

ஈதல் போலும்
என்றது இரந்தேம்
என்று சிறுமை உறுத
லின்றி உயர்ந்தாரைப்
போல் பெருமிதத்தர்
ஆவர் என்றது. மேல்
இகழாது ஈவார் மா
ட்டு இரக்கலாம்
என்றார்; அவர் மூவ
கையர் ஆதலின்

முற்படஉதவுவர் மாட்டு
இரக்கலாம் என்று
கூறப்பட்டது. கரத்தல்
கனவிினும் தேறாதார்
என்றமையால்
உதவுவார் என்று
கொள்ளப்படும்.
6

1057. கரப்பிடும்பை
யில்லாரைக்
காணி னிரப்பிடும்பை
யெல்லா

மொருங்கு கெடும்.

(இ-ள்) கரப்பும் இடும்பையும் இல்லாதாரைக் காண்பாராயின், இரப்பினானாகிய இடும்பையெல்லாம் ஒருங்கு கெடும், (எ-று).

இவையிரண்டுமில்லதார் என்றமையால், இச் செல்வராயினா

ர் மாட்டு இரக்க லாம்.
மன் றது.
7

1058. கரப்பிலா
நெஞ்சிற் கடனறிவார்
முன்னின்
றிரப்புமோ ரேஎ
ருடைத்து.

(இ-ள்)
கரப்பிலாத
நெஞ்சினை யுடைய
ஒப்புரவறிவார் முன்பே

நின்று, இரத்தலும்
ஓரழகுடைத்து, (எ-று).

ஏர்-யாமும்
இவ்வாறு செய்ய
வேண்டுமென்று
கருதுதல். இஃது, ஒப்புர
வறிவார்மாட்டு இர
க்கலா மென்றது.
8

1059. கரப்பிலார்
வையகத்
துண்மையாற்

கண்ணின்

றிரப்பவர் மேற்கொள்

வது.

(இ -ள்)

ஒருவன் முன்னே

நின்று இரத்தலை

இரப்பார்

மேற்கொள்வது,

கரப்பில்லாதார்

உலகத்து

உண்டாதலானே;

மற்றொன்றா லன்று,

(எ-று).

மேல் கரவாதார்மாட்

டிரக்கவென்றார்,

அஃது உலகத்துப்

பெறுத

லரிதென்றார்க்கு. இது

கூறப்பட்டது.

1060. இரப்பான்

வெகுளாமை வேண்டு

தானேயுஞ் சாலுங் கரி.

RangaRakes

9

திருப்பிடும்பை

tamilnavarasam.com

323

11. இரவு

(இ-ள்)

ஒருவனை யிரந்தான்
அவன் ஈந்திலனென்று
தான் வெகுளாதொழிதல்
வேண்டும்;

பொருளரிதென்பதற்குத் தன்னுடைய நிரப்பிடும்பை தானேயும் அமையுஞ் சான்று, (எ-று).

வெகுளாமைக்குக் காரணம் பிறிது கூற வேண்டா என்றது. இஃது, இரப்பார்க்கு வேண்டியதோரியல்பு கூறிற்று. 10

# இரவச்சம்

இரவச்சமாவது
இரத்தலைத்
தவிரவேண்டுமென்று
கூறுதல். மேல்
நல்கூர்ந்தார் ஈவார்
மாட்டே இரத்த
லமையுமென்று
பொதுப் படக்
கூறினாராயினும்,
மேலாயினார்க்கு அது
தகுதியன்றென்பது

குறித்து இவ்வதிகாரம் கூறப்பட்டது. மே
மலதனோ டியையும்
இது.

1061. இரப்ப
விரப்பாரை யெல்லா
மிரப்பிற்
கரப்பா ரிரவன்மி
னென்றது.

(இ-ள்) பிறர்
மாட்டு இரந்து செல்வா
ரெல்லாரையும் யாசி
ரந்து கொள்ளா

நின்றேன்; இரக்குமி த்து, இல்லை யென்பவர் மாட்டு இரவ ாது ஒழியுங் கோள் எ ன்று, (எ-று).

'யாவர் மாட்டும் இரத்தலாகாது' என்று கூறுவார், மூற்பட ஈயாதார் மாட்டு இ ரக்கலாகாது என்றது.

I

1062. கரவா துவந் தீயுங்

கண்ணைன்னார் கண்ணறு
மிரவாமை கோடி
யுறும்.

(இ-ள்) இல்லை
என்னாது மனம்
மகிழ்ந்து கொடுக்கும்
கண் போல்வார் மாட்டும்
ஒரு பொருளை இரந்து
செல்லாமை. இரந்து
பெற்ற பொருளினும்
கோடி மடங்கு மிகுதி
உடைத்து என்றவாறு.

இஃது, ஈவார் மாட்டும்

RangaRakes

இரக்கல் ஆகாது

என் றது. 2



324

12. இரவச்சம்

1063.

ஆவிற்கு நீரென்

றிரப்பினு நாவிற்

கிரவி னிளிவந்த தில்.

(இ-ள்) இப்

பசுவிற்குத் தண்ணீர்

தருமினென்று பிறரை

இரப்பினும்; நாவிற்கு

இரத்தல்போல்

இளிவரவு தருவது

பிறிது இல்லை,

(எ-று).

இஃது.

அறத்துக்காக

இரத்தலும் ஆகா

தென்றது. இவை

மூன்றினாலும்

இரத்தலைத் தவிர

வேண்டும் என்று

கூறப்பட்டது. 3

1064. இன்மை

யிடும்பை யிரந்துதீர்

வாமென்னும்

வன்மையின்

வன்பாட்ட தில்.

(இ-ள்) வறுமையாலுற்ற துன்பத்தைப் பிறர்பாட்டு இரந்து பெற்ற பொருளினானே தீர்ப்பேமென்று கருதுகின்ற வன்மைபோல ரன்பாயிருப்பது பிறிது இல்லை. (எ-று).

இஃது,

இரந்தாலும் நல்குரவு
தீரா தென்றது.

4

1065.

இரவென்று மேமாப்பி
றோணீ கரவென்றும்
பார்தாக்கப் பக்கு
விடும்.

(இ-ள்)

ஒருவன்

வறுமையாகிய கடலை

நீந்தி ஏறுவதாக

அமைத்துக் கொண்ட

இரத்தலாகிய அ

ரணில்லாத தோணி

இரக்கப் பட்டார்

மாட்டுக் கரத்தலாகிய

கல்லோடே தாக்கப்

பிரிந்துவிடும், (எ-று)

இஃது.

நல்குரவு

தீராமைக்குக்

காரணங் கூறிற்று.

இவை இரண்டினானும்

இரவினால்

பயனின்மை

கூறப்பட்டது.

5

1066.

இரவுள்ள வுள்ள

முருகுங் கரவுள்ள
வுள்ளதுர உ மின்றிக்
கெடும்.

(இ -ள் )
இரப்பமென் று
நினைக்க உள்ளம்
கரையும்; இரக்கப்
பட்டவர் கரக்கு
மதனை நினைக்கக்
கரைந்து நின்ற
உள்ளம் மாய்ந்து
கெடும், (எ-று).

இ ஃது ,
இ ரப்ப ார் க்கு
ஊக்கமில்லைய ா ம்
என்றது. 6





## 12. இரவச்சம்

1067. கரப்பவர்க்
கியாங்கொளிக்குங்
கொல்லோர

விரப்பார்க்குச்
சொல்லாடப்
போஒ முயிர்.

(இ-ள்) எமக்கு
யாதும் இல்லை; சிறிது
ஈயவேண்டுமென்று செ
ல்லுவார்க்கு அக்
குறித்தவர்கள்
இல்லையென்று சொ
ன்ன அளவிலே
உயிர் போய்ப்

பிணம்போல நிற்பர்கள்; (பொருள்) உடையராய் வைத்து அவர் சொன்ன இல்லையென்னுஞ் சொல்லையே சொல்லி யாதார்க்கு உயிர்க்கு உயிர் எவ்விடத்து ஒளித்து நிற்கின்றதோ, (• I - றுா)

இது, பிணத்தை யொப்பரென்றது .

7

1068. இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான்.

(இ-ள்) துப்புரவு இல்லாக்கால் இறந்து படாதே பிறர்மாட்டு இரந்து கொண்டும் உயிர் வாழ்தல் வேண்டுமாயின், உலக நடையை இவ்வாற்றால் கற்பித்த முதல்

வன் மிகக்கெடுவானாக வேண்டும். (எ-று).

இஃது. இரக்கு மதனின், இறக்க அமையுமென்றது. இவை முன்றினாலும் இரவினால் வரும் குற்றம் கூறப்பட்டது, 8

1069 கெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாடந்த

துண்ணலி றுரங்கினிய
தில்.

( இ -ள்)

மோரினும் காடியினும் அ
டப்பெறாது தெளிந்த
நீரி னாலே அடப்பட்ட
புற்கையாயினும், தனது
தாளாண்மையால் வந்த
தனை உண்டலின் மிக
இனிதாயிருப்பது பிறிது
இல்லை, (எ-று).

இரந்து
கொண்டக்காரம்
பாலோ டயிறலின்
புற்கை அயிறல் இனிது
என்றது.
9

1070. இடமெல்லாங்
கொள்ளாத் தகைத்தே
யிடனில்லாக்
காலு மிரவொல்லாச்

RangaRakes

சால்பு.



**326**

## 12. இரவச்சம்

(இ-ள்)

தன்சுற்றத்தளவு
உணவுக்கு வருவாய்
இல்லாத காலத்தினும்,
பிறரை இரத்தற்கு
இசையாத சால்பு
என்பது அகன்றவுலக

மெல்லாம் கொள்ளாத
பெருமை யுடைத்து.
(எ-று).

இஃது. இரவாதார்
ஞும் இரவாமையால் வரும்

/

பெரிய ரென்றது.
இவை இரண்டினா நன்
மை கூறப்பட்டது.
10

# 3. கயமை

கயமையாவது
இழிகுணத்தாராகிய ம
ாந்தரியல்பு கூறுதல்.
இவர்
மேற்கூறப்பட்டார்
எல்லாரினும், இ
ழிந்தாராதலின்
இறுதியிற் கூறப்பட்டது.

1071. மக்களே
போல்வர் கயவ
ரவரன்ன

லொப்பாரி யாங்கண்ட

தில்.

(இ-ள்) கயவர் மக்களை யொப்பவர்; அம்மக்களை யொக்கு மாறு போல ஒப்பது ஒன்றனோடு மற்றொன்று உவமை கூறப்படு மவற்றில் யாங்கண்டறிவது இல்லை, (எ-று).

உறுப்பொத்துக் குணமொவ்வாமையால், கயவர் மக்களல்லராயினார்; உறுப்பொத்தலால் உவமிக்கப்பட்டார். இது குணமிலர் என்றது.

1

1072. தேவ

ரனையர் கயவ
ரவருந்தா
மேவன செய்தொழுக
லான்.

(இ-ள்) கயவர் தேவரை யொப்பவர், அத்தேவரும் இக்கய வரைப் போலத் தாம் வேண்டியன செய் தொழுகுவ ராதலான், (எ-று).

இது கயவர்

வேண்டிற்றுச்



செய்வாரென்றது.

2





13. கயமை

1073. நன்றறி

வாரிற் கயவர் திருவுடை

_யர்[1]

நெஞ்சத் தவல மிலர்.

(இ-ள்) நன்மை

யறிவாரினும் கயவர்
திருவுடையர்; இம்மை
மறுமைக்கு
உறுதியான செய்யப்
பெறுகின்றிலே
மென்னும் கவற்சி
நெஞ்சின்கண்
உறுதலில
ராதலான், (எ-று).

இது,
அறமறியாரென்பது.

1074. அச்சமே
கீழ்கள தாசார மெச்ச
மவாவுண்டே
லுண்டாஞ் சிறிது.
(இ-ள்) கயவர்
ஆசாரமுடைய
ராதற்குக்

3

காரணம் அச்சமே;
அஃதொழிய.

ஒருபொருள்மேல்
ஆசையுடையராயின்,
அது காரணமாகவும்
சிறிது ஒழுக்கம்
உண்டாம், (எ-று).

இஃது,

இயல்பான ஒழுக்கம்
இலரென்றது.

4

1075.

அகப்பட்டி யாவாரைக்
காணி னவரின்

மிகப்பட்டுச்
செம்மாக்குங் கீழ்.
(இ-ள்)
மனையகத்திருந்து
பறட்டையாம்
பெண்டிரைக் காணின்,
அவரினும் மிகப்
பறட்டையாயின்
அதனைப் பெற்றே
மென்று இறுமாப்பர்கய
வர். (எ-று).
இது,

நிறையிலரென்றது.
5

1076.

உடுப்பதூஉ
முண்பதூஉங் காணிற்
பிறர்மேல்
வடுக்காண வற்றாகுங்
கீழ்.

(இ-ள்) பிறர்
உடுப்பதனையும்
உண்பதனையும்
காண்பாரா யின், அ

வர்மாட்டு உள்ள குற்றங்களை ஆராயவல்லராவர் கயவர் (எ-று).

இஃது, அழுக்க ாறுடையாரென்றது.

6

---

1. "திருவுடையார்" என்பது மணக். பாடம்.

2. "கூன்கைய" என்பது

## 13. கயமை

### 1077. சர்ங்கை

விதிரார் கயவர் கொடி
றுடைக்குங் கூர்ங்கையய[1]
ரல்லா தவர்க்கு.

(இ-ள்)

தங்கதுப்பிணை ஒடிக்கும்

வலியகையினை
உடைய
ரல்லாதார்க்கு,
ஈரக்கையுந் தெரியார்
கயவர், (எ-று).
ஈரக்கை-உண்டு
கழுவினகை, கூன்கை
என்று பாடம் ஓதினும்
அமையும். இஃது
இரப்பார்க்குக்
கொடாரென்றது.

1078.

அறைபறை யன்னர்
கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க்
குய்த்துரைத்த லான்.
(இ-ள்) கயவ

ர் அறையும்

பறைபோல்வர்;

தாங்கேட்ட
மறைகளைப் பிறர்க்குக்
கொண்டு சென்று

அறிவித்தலான், (எ-று).

இஃது, அடக்க மில ரென்றது.

8

1079. சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோற்
கொல்லப் பயன்படுங் கீழ்.

(இ-ள்) பிறர் தங்குறையைச் சொல்ல

...துதற்கு இரங்கிப்

பயன்படுவர் மேன்மக்கள்; அவ்வாறன்றிக் கரும்பு பயன்படுமாறு போலத் தம்மை நெருக்கினால் பயன்படுவர் கீழ்மக்கள், (எ-று).

இஃது,

ஒறுப்பார்க்குக்

கொடுப்பரென்றது.

9

1080. எற்றிற்

குரியர் கயவரொன்

றுற்றக்கால் விற்றற்

குரியர் விரைந்து.

(இ-ள்) கயவர்

யாதினுக்குவல்லரெனின்

தமக்கு ஒரு துன்ப முற்றால் விரைந்து தம்மை விற்க வல்லர், (எ-று).

இது,

நிலைமையில ரென்றது.

10

குடியியல் முற்றிற்று

பொருட்பால் முற்றிற்று.

---

1. "கூன்கைய" மணக். பாடம்.

# 3. காமத்துப்பால் (25)

காமத்துப்பாலாவது மைந்தர்க்கும் தம் மகளிர்க்கும் கலவயினா-ணாகிய இன்பப் பகுதி கூறுதல். அஃது யாங்ஙனம்

கூறினா ரெனின்,
ஒருவனுக்கு இன்பம்
நுகர்தற்குரிய இடம்
கன்னியரும் கன்னிகை-
யரும் பிறர்தாரமும் என
மூவகையல்லதில்லை;
அவற்றுள் பிறர்மனைக்
கூட்டம் பாவம்தரும்
என்று அறத்துப்பாலுட்
கூறிக்-கணிகையர் கூட்ட
ம் பொருட் கேடுதரும்
என்று பொருட்பாலில்
கூறினார். ஆகலின்

அறனும் பொருளும் இன்பமும் வழுவாமல் வருவது கன்னியர் கூட்டம் என்று அதனை ஈண்டுக் கூறப்பட்டதென்க. அதுதான் எட்டு வகைப்படும்; பிரமம், பிராஜாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தர்வம், அசுரம் இராக்கதம் பைசாசம் என அவற்றுள் அசுரம் முதலான மூன்றும்

ஒருத லைக்காம ப்
ஆதலானும், பிரமம்
முதலான நான்கும்
ஒப்பில் கூட்டம்
ஆதலானும், அவை
யிற்றுக்கு இன்பச் சிறப்பு
இன்மையின் காந்துருவ
நெறி யே ஈண்டுக்
கூறப் பட்டதென்று
கொள்ளப்படும் என்னை?
"முன்னைய மூன்றும்"
கைக்கிளைக் குறிப்பே;
பின்னைய நான்கும்

பெ ருந்திணைபெறுமே ம.
என்றும் ''காமக்
கூட்டம் காணுங்காலை
மறையோர் தேஎத்து
மன்றல் எட்டினுட்டு
றை யமை ம
நல்யாழ்த்துணைமை யே
ாரியல்பே, என்று:
இலக்கணம் கூறுதலின்
அஃதாவது கொடுப்
போரும் அடுப்போரும்
இன்றி ஒத்தார் இருவர்
தாமே கூடுங் கூட்டம்

என்னை? ' ' அ| துமே ை ,
தாளே யவளே தமியர்
காணக், காமப் புணர்ச்சி
இருவயின் ஒத்தல்'' $
எ ன் பவ ா தலின்
இச்சூத்திரம் நாடக
வழக்கிற்குக் கூறியத
ாகலின் , ஈண்டு
உரைக்கின்ற காமமும்
நாடக வழக்கே, எனின்?
இச்சூத்திர ம்
கூறுகின்றுழி
உரையாசிரிய ர்

உலகத்தோடு ஒத்தும் ஒவ்வாவரும் என்று பொதுப் படக் கூறினாராதலின், இஃது உலக வழக்கை நோக்கி எடுத்துக் காட்டப் பட்ட தென்க. இக்காமப் புணர்ச்சியை வடநூலாசிரியர் அராகத்தாற் கூடும் கூட்டம் என்ப.

---

*

---

தொல்-களவியல்—14.

† " " "

$ இ

றையனார் — களவியல்-

RangaRakes

 330

# 3. காமத்துப்பால்

இ துதான்
மூவகைப்படும் .
அருமையிற் கூடலும்,
பிரிந்து கூடலும், உண் டிக்
கூடலு ம் என. அ
ருமையிற் கூ டுதல்

ஆவது , கூடுதற்கு
எளிது அன்மையால்
ஒருவர் ஒருவரைக்
கண்ட காலம் தொ
ட்டும் ஒத்த
நினைவினராய் நின்று
கூடுதல் . பிரிந்து
கூடுதல் அஃது
இவ்வாறு கூடி னார்
பின்பு ஒரு
காரணத்தால் பிரிந்து
அதன்பின் கூடுதல்.

ஊடிக் கூடல் ஆவது,
தலைமகன் மா
ட்டுத்தவறு கண்டு
பு லந்த
த லைமகளைப்புலவி
நீக்கிக் கூடுதல்.
இவை மூன்று
கூட்டமும் இவற்றது
நிமித்தமும்
இக்காமத்துப் பாலும்
கூறுதல் தமிழ் நடை
யன்று; ஆதலின்

இதற்கு இலக்கணம் யாங்ஙனம் பெறுதுமெனின் இவ்விலக்கணம் தமிழ் நடையாயின் அகப் புறம் என்று கூறுதல் வேண்டும். அவ்வாறு கூறாது அறம் பொருள் இன்பம் என வட நூல்வழியே கூறினார். ஆதலின் இதற்கு இலக்கணம் வடமொழி ஆச்சாரியம் என்னும்

காமதந்திரத்துச் சுர
தவிகற்பம் என்னும்
அதிகாரத்துக் கண்டு
கொள்க. அன்றியும், *
'புணர்தல் பிரிதல்
இருத்தல் இ ரங்கல்
ஊடல் இவற்றின்
நிமித்தம் என்றிவை,
தேருங்கா லை
திணை க்குரிப்
பொருளே'' *
என்றா ராதலின் ,

அவற்றுள் இருத்தலும்
இரங்கலும் பிரிந்துழி
நிகழுமன்றே;
அவற்றைப் பிரிவினுள்
அடக்கிப் புணர்தலும்
பிரிதலும் ஊடலும்
எனத் தமிழ் நடையிற்
கூறினும் இழுக்காது
இதனுள் தகையணங்
குறுதல் முதலாகப்
புணர்ச்சி மகிழ்தல்
ஈறாக அருமையிற்

கூடலும் அதற்கு
நிமித்தமும் ஆகிய
அதிகாரம் மூன் றும்,
நல ம்
புணைந்துரை ரத்தல்
முதலாகப் புணர்ச்சி
விதும்பல் ஈறாகப்
பிரிந்து கூடலும்
அதற்கு நிமித்தமும்
ஆகிய அதிகாரம்
பதினெட் டும்,
நெஞ்சொடு புலத்தல்

முதலாக ஊடலுவகை
ஈறாக ஊடிக் கூடலும்
அதற்கு நிமித்தமும்
ஆகிய அதிகாரம்
நான்கும் ஆக
இருபத்தைந்ததிகாரமும்
கூறப்பட்டது.
அவற்றுள் முன்பு
கண்டறியா அருமை
மயிற்
கூடலைப்புணர்ச்சி
மகிழ்தலென்றும்,

அு தனையறிதல ாற்
பிரிந்து கூடலைப்
புணர்ச்சி விதும்பல்
என்றும், கலாந்தீர்ந்து
கூ டுதல ா ல்
ஊ டிக்கூடலை
ஊடலுவகை யென்றும்
கூறினார் என்று
கொள்ளப்படும்.

---

* தொல்-அகம்-16.

I. களவியல்
(7)

( அருமையிற் கூடல்
3) 1. தகை
யணங்குறுத்தல்

தகையணங்
குறுத்தலாவது

தலைமகனும்

தலைமகளும் எதிர்ப் பட்

ட இடத்துத்

தலைமகளது கவின்

தலைமகனை

வருத்துதலும்,

தலைமகனது கவின்

தலைமகளை

வருத்துதலுமாம். இது

முதலாகக் காமம் நிகழு

மாதலின் இது முற்பாடு

கூறப்பட்டது.

1081.

அணங்குகொ
லாய்மயில் கொல்லோ
கனங்குழை[1]
மாதர்கொல் மாலுமென்
நெஞ்சு.

(இ-ள்) இக்கணங்குழையையுடையவள் தெய்வங் கொல்லோ? நல்ல தொருமயில் கொல்லோ? அன்றிமக்க ளுள்ளாள் என என்மனம் மயங்கா நின்றது; இவற்றுள்யாதோ என்றவாறு.

எனக்குத்
தெரிகின்ற தில்லை
என்றவாறாயிற்று.
கனங்குழை- ஆகுபெயர்.

ஆய்தல் என்பது
தெளிதல்;
பலவற்றினும் தெரியப்
படுதலின் நல்ல
தென்று
பொருளாயிற்று,
மக்களும் தேவரும் ஒரு
நீர்மையராதலின்
தெய்வமோ மகளோ
என்றையுறுக; மயிலோ
என்ற
தென்னையெனின்?

இம்மணம் காந்தருவ
மன்றே; தலைமகளைத்
தலைமகன்
எதிர்ப்படுங்கால்
யாவரும் இல்லாததோர்
பொழிலகத்தே
எதிர்ப்படுதல்
வேண்டும்; ஆயிடை
எதிர்ப்பட்ட தலைமகன்
இப் பெற்றியாள்
இவ்விடைத்
தனிவருதல்

கூடாரதாகலின்
ஈண்டுஉறைறவதோர்
தெய்வமோ என்ற
ஐயுற்றான்.
அதன்பின்
பொழிலகத்து வாழ்வன
மயில்கள் பலவுள;
அவற்றுள்
இஃதொருமயில் விசேட
மோ என்றையுற்ருன்
என்று கொள்ளப்படும்.
இதனுட் காட்சி

சொல்லி ஐயஞ்
சொல்லுதலன்றே
இலக்கணம்; அது
கூறாததென்னை எனின்
கண்ட காலத்துப்
புணர்ச்சி வேட்கை
தோற்றுகையும் தோற்
றாமையும்
நிகழுமாதலான்
அதனை ஒழித்து
அதற்குக் காரண மாகிய
ஐயம் முதலாகச்

சொன்னான் என்க.

இது தலைமகன்

தலை ¹மகளை

எதிர்ப்பட்டுழி

ஐயுற்றது.

1

---

1. " கணங்குழை "

RangaRakes

என்பது மணக். பாடம்.

1.

தகையணங்குறுத்தல்

1082.

நோக்கினா

ணோக்கெதிர்

நோக்குத றாக்கணங்கு

தானைக்கொண்

டன்ன துடைத்து.

(இ-ள்)

இவ்வழக்கினை

யுடையவள் எனது

நோக்கின் எதிர்
நோக்குதல், தானே
வருத்தவல்ல தெய்வம்
சேனையைக் கொண்டு
வந்தது போலும்,
(எ-று).

தெய்வத்திற்கு
உவமை வடிவு;
தானைக்கு உவமை
நோக்கம். இது,
மெய்கண்டு
வெருந்துவான் கண்

கண்டதனால் வருத்
த மிக்கமை கூறியது. 2

1083.
பண்டறியேன்
கூற்றென் பதனை
யினியறிந்தேன்
பெண்டகையாற் பேர
மர்க் கட்டு.

(இ-ள்) பண்டு
கூற்றினது வடிவு இ

ன்னை பெற்றித்தென்று
அறியேன்;
இப்பொழுது
அறிந்தேன்;
பெண்டகைமை
யோடே கூடப்
பெருத்து
அமர்த்த கண்களை
யுடைத்து. (எ-று).

கூற்றென்றறிந்தேன்
என்றது மேல்
ஐயப்பட்ட மூன்றினும்

எம்மை வருத்துதற்குத்
தக்காளென்னுங்
குறிப்பு .
பெண்தகைமை யாகிய
நடையும் கண்
இமைத்தலும் கண்டு
மக்களுள்ளாள் என்று
தேறியது .
3

1084. கண்டா
ருயிருண் ணுந்
தோற்றத்தாற்

பெண்டகைப் பேதைக் கமர்த்தன கண்.

(இ-ள்) தன்னைக்கண்டவர்கள் உயிரையுண்ணும் தோற்றத்தாலே, பெண்தகைமையையுடைய பேதைக்கு ஒத்தன கண் (எ-று).

அமர்தல்-மேவல்.

அது பொருத்தத்தின்

வந்தது. இது

பேதையோடு ஒத்த தொழிலுடைத்தென்று கண்ணின் கொடுமையை யுட்கொண்டு கூறியது. 4

1085.

கொடும்புருவங் கோடா மறைப்பி

செய்யல மன்னிவள் கண்.

RangaRakes

ணடுங்கஞர்

1

தகையணங்குறுத்தல்

இக்கொடிய

புருவம், இவள் கண்கள்

என்னைத் துன்பம் செய்

வதன் முன்னே கோடி

மறைத்தனவாயின்,

அதனைக் கடந்து

போந்து, எனக்கு

நடுங்கப்படும் துன்பந்

செய் ய ல ா ற்ற ா வே
அு ளை வ (எ - று).

இது, மேல்
தலைமகன் கூறிய
செ ா ற் கேட்டு நா
ண முற்ற தலைமகள்
தலையிறைஞ்சிய ா வ ழிக்
கண்ணை மறைத்துத்
தோ ற்றிய பு ருவ
முறிவுகண்டு தலைமகன்
கூறி ய து .

1086.

ஒண்ணுதற் கோஒ
வுடைந்ததே ஞாட்பினு
ணண்ணாரு முட்குமென்
பீடு.

(இ-ள்)
இவ்வொள்ளிய நுதற்கு
மிகவுங் கெட்டது,
போரின் கண்
கிட்டாதாரும் உட்கும்
எனது வலி, (எ-று).

உம்மை எச்சவும்மை. கிட்டினார் உட்குமுன்னே அமைந்து கிடைத்தது. மேற்கூறிய சொற்கேட்ட தலைமகள் மிகவுங் கவிழ்ந்து நிலநோக்கிய வழிப் புருவத்தின் மேற்றோன்றிய (தலைமகள்) நுதல் கண்டு கூறியது. 6

1087. கூற்றமோ
கண்ணோ பிணையோ
மடவர
ணோக்கமிம்
மூன்று முடைத்து.

(இ-ள்) கொடுமை செய்தலா ல்,
கூ ற்றமோ ,
அ ரு ள் செய்தல ால்
க ண் ே ணா ?

வெருவுதலான் மான்
பிணையோ ?
மடவரலே! நினது நோ
க்கமான இவை
மூன்று பகுதியையும்
உடைத்து, அவற்றுள்
யாதோ? (எ-று).

தலைமகள் குறிப்பறிதற்
பொருட்டுத் தலைமகன்
கூறியது. 7 1088.
பிணையேர் மடநோக்கு

நாறுமுடையாட்
கணியெவனோ
வேதில தந்து.

(இ-ள்)
பிணையை யொத்த
மடப்பத்தினையுடைய
நோக்கினையும்
நாணினையும்
உடையவட்குப் பிறிது
அணிதந்து அணி
கையாறினைக்
கருதியோ? பிறரை
அணியும், (எ-று).

# வருத்துதற்கு இளைதாமோ

tamilnavarasam.com

334

1.

தலையணங்குறுத்தல்
மேல் தலைமகன்

கூறிய சொற்கேட்டு நா
ணுற்ற தலைமகள், வா
ளாது நிற்றல் ஆற்றாது

தன் அணிகலனைத்
தொட்டுழி, அதனை
நோக்கி
இத்தன்மையாட்கு
இதனையும் அணிதல்
வேண்டுமோ என்று
கொடுமை கூறுவான்
போல நலம்
பாராட்டியது.
8
1089. கடாஅக்
களிற்றின்மேற் கட்படா
மாதர் படாஅ

முலைமேற் றுகில்.

(இ-ள்)

மதயானை முகத்துக்

கண்மறைவாக இட்ட

படாம் போலும்; மாதரே!

நினது படாத

முலைமேல்

இட்டதுகில், (எ-று).

நீங்கிற் கொல்லு

ம் என்பது கருத்து.

முலை கண்டு அவ் வே

ட்கையால் தலைமகன்

கூறியது.

இத்துணையும் தலைமகன் கூற்று.
9

1090. உண்டார்க ணல்ல தடுநறாக்
காமம்போற்
கண்டார் மகிழ்செய் தலின்று.

(இ-ள்)
உண்டார் மாட்டல்லது அடப்பட்டநறவு காமம் போலக்

கண்டார் மாட்டு
மகிழ்ச்சி செய்தலின்று,
(எ-று).

இது, தலைமகனைத்
கருதியது.

2.

தலைமகள் கண்டுழி
வருத்த முற்றுக்
10

---

குறிப்பறிதல்

குறிப்பறிதலாவது
தலைமகளுள்ளக்
கருத்துத்
தலைமகனறிதல். இது
தலைமகற்கேயுரித்து.
பெண்டிர்
நாணுடையரய ன்றே;
அவரது உள்ளக் கருத்து
வெளிப்படுமாறு
என்னையெனின் ,
மேலையதிகாரத்துத்
தலைமகனைக் கண்ட
தலைமகள். காமம்

போல் கண்டார்
மகிழ்ச்செ ய்தனின் று”
என்று நினைத்தாளாகக்
கூறினாரன்றே; அத
னானே கண்ணும்
முகனும் வேறுபடும்;
மனக் குறிப்பு அறி
தல் கூறியது



அதனானே
அறியலாகும். எற்றுக்கு?
பிறவாற்றானும்

## 2. குறிப்பறிதல்

நெறியுளவால் எனின்? பிறவாற்றாற்

கூடுங்கால். குரவரால்

கூடில்

பெருந்திணை யாம்;

பொருள்கொடுத்துச்ச

ரின் அசுரமாம

வலியிற்சா ரின்

இரா க்கதமாம்;

மறவியிற்சாரின் பசாசமா

ம்; ஆதலின் இக்கூ

ட்டத்து க்குக்

குறிப்பறிந்தே புண

ரவேண டுதலின் .

இதுகூறப் பட்டது.

மேலதனோடி யையும்

இது. இது தலைமகற்

குரித்தன்றோ வெனின்

அவன் வெளிப்பட

இரத்தலான் வேண்டா

வென்க.

1091. இருநோக்

கிவளுண்க ணுள்ள
தொருநோக்கு
நோ ய்நோக்கொன்
றந்நோய் மருந்து.

(இ-ள்) இவள்
உண் கண்ணிலுள்ள
நோக்கம் இ ர ண் டு
வகைத்து; அவ்விரு
வகையினும் ஒருநோக்கு
நோய் செய்யும்; ஒரு
நோக்கு அதற்கு
மருந்தாம், (எ-று).

நோய்நோக்கென்பது
முதல் நோக்கின
நோக்கம்; மருந்து
நோக்கென்பது இதனா
ல் வருத்தமுற்ற
தலை மகளைத்
தலைமகள் உள்ளங்
கலங்கி நாணொடுகூடி
நோக்கின நோக்கம்.
இது நாணமுடைய
பெண்டிரது உள்ளக்
கருத்து வெளிப்படுமாறு

கூறியது. 1

1092 நோக்கினா
ணோக்கி யிறைஞ்சினா
ளஃதவள்
யாப்பிறை
ளட்டிய நீர்.

(இ-ள்) முற்பட
நோக்கினாள்.
நோக்கின பின்பு
நாணினாள், அஃது அ
வன் நட்புப் பயிர்வளர

அதன்கண் வார்த்தநீர்
(எ-று)

நாண் பேர

காமைக்குக் காரணங்

கூறியவாறாயிற்று

பந்தம் என்பதனையாப்பு

என்று கூறினார்,

பார்த்தவள் பெயராது

நாணி நிற்றலும்

உடன்படுதலாம்

என்றது.

1093, யானோக்குங்
காலை நிலனோக்கு
நோக்காக்காற்
றானோக்கி
மெல்ல நகும்.

(இ-ள்) யான்
தன்னைப்
பார்க்குங்கால், தான்
நிலத்தைப்
பார்க்கும்; யான்
பாராத காலத்துத்
நகும், (எ-று).

